உ
ஓம்.
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| தொகுதி | ஆங்கீரஸ ஹு ஆனிமீ கஉ | பகுதி |
|---|---|---|
| 17 | 1932 ஹு ஜூன் மீ 1உ | 12 |

## கடவுள் வணக்கம்.

மத்தர் பேயரொடு பாலர் தன்மையது
மருவி யேதுரிய வடிவமாய்
மன்னு தேசமொடு கால மாதியை
மறந்த வின்னடிய ரடியிலே
பத்தி யாய்நெடிது நாளு மென்னையொரு
மைய றுந்தகில மாயையைப்
பாரு பாரென நடத்த வந்ததென
பார தத்திலுமி துன்னதோ
சுத்த நித்தவியல் பாகு மோவுனது
விசுவ மாயைநடு வாகவே
சொல்ல வேணும்வகை நல்ல காதிகதை
சொல்லு மாயையினு மில்லையென்
சித்த மிப்படி மயங்க மோவருளை
நம்பி னோர்கள் பெறு பேறிதோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே. (1)

வெள்ளங் குலாவுசடை வெள்ளக் கருணையினன்
கள்ளங் குலாவுநெஞ்சக் கள்ளனே—யுள்ளத்தி
லில்லனென் றுள்ளனென் றெங்கும் வியாபகத்தா
னல்லனென் றுஞ் சொல்லவழக் காம். (2)

ஏறுக் குடற்சுமைகொண் டேனிருந்தே னையனே
யாதிக்க மோன வருட்டாயே—சோதியா
மன்ன நிருவிகற்ப வானந்த நிட்டையிலே
பின்னமற வில்லாத பின். (3)

# அரும்பொருள் விளக்கம்

1. **ம**த்தர்=('உன் மத்தம் பிடித்தவன்' என்று கூறுவதுபோல்) எப்போதும் ஒரே விதமாய்ப் புகழ்ந்தவரையும் வைதவரையும் வித்தியாசமாய்க் கருதாமல், தன் தேகத்தைப் பற்றிய சுத்தா சுத்தத்தையும் கவனியா திருப்பவர்.

பேயர் = பேய்பிடித்தவர்—அவர்களுக்குப் பிறர் செய்யும் துன்பங்களை அப்போதே தாங்கிக் கொள்வதாக, அவர்கள் அவற்றால் உறுத்தப்படாதவர்கள்போல் இருப்பார்கள்.

பாலர் = குழந்தைகள்—குழந்தைகள் பசி வந்தபோது பாலுண்டு மற்றபடி எவ்விதக் கவலையுமின்றி, எதிர்காலத்தைப்பற்றி எவ்வித ஏக்கமுமின்றி எதற்கும் அஞ்சுதலுமின்றி, பிறர் சுக துக்கமும் தமக்குத் தாக்காமல், வேண்டுவது வேண்டாமையின்றி ஆனந்தமா யிருக்கும் தன்மையுடையன. அவைகள் ஏதேனும் செய்யினும் எவ்விதப் பயனையும் கருதிச் செய்வதில்லை.

துரியம் = சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி எனும் மூன்றவத்தைகட்கும் அப்பாற்பட்ட நான்காம் நிலை. கருவிகரணாதிகளை யெல்லாம் கழித்த பின் ஆவரணம் அல்லது மாயை யென்பதையும கடந்து ஆன்மா தான் மாத்திரமாய்த் தனித்து நிற்கும் சுத்த நிலையே துரியமாகும்.

தேசமொடு காலமாதியை மறந்து = கால தேச வஸ்து பரிச்சேத மற்று:

காதிகதை மாயையின் அதியற்புதமான பிரபாவத்தைக் காட்டுதற்கு வாசிட்டத்தில் கூறப்பட்டுள்ள ஒரு கதை.

மத்தர் பேயர் பாலர் அரசர் இவர்கள் தன்மையை யடைந்திருப்பது துறவிகளாகிய சுத்த ஞானிகள் இருக்கும் நிலையாதலால் அவ்வாறு கூறினர்.

2. வெள்ளம்=ஜலம். இங்கு கங்கையைக் குறிக்கும்.

வெள்ளக்கருணையினன்=கருணைசமுத்திரமான ஈசுவரன்.

வியாபகத்தான் அல்லன்=சர்வவியாபக முடையவனல்ல.

"நான் கள்ளம் பொருந்திய வஞ்சநெஞ்சுடையவ னாதலின் என் உள்ளத்தில் பரமசிவன் இருக்கமாட்டான் எனில், ஈசுவரன் சர்வவியாபக முடையவன். அதாவது எள்ளுக்குள் எண்ணெய்போல் அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்து நிற்பவன் என்ற உண்மை பொய் யென்று கூற நியாயமுண்டாகும். ஆகையால் என் உள்ளத்தில் பரமசிவன் உளன்" என்று பரமாத்மா நமக்குள் அனன்னியமாக உளன் என்பதைத் திறப்படுத்தக் கூறி யருளினர். இதை யெப்போதும் மறவாதிருப்பது அனன்னிய பக்தியாகும். இதனால் சித்த சுத்தியும் அத்துவாரா மெய்ஞ்ஞானமும் சித்திக்கும்.

3. எதுக்கு=என்னத்திற்காக.

உடற்சுமைகொண்டு ஏன் இருந்தேன்=உடலாகிய சுமையைத் தாங்கிக்கொண்டு எதற்காக உலகில் வாழ்ந்துகொண் டிருக்கிறேன்.

பிரம்மான்ம ஐக்கியமாகிய அத்துவித முத்தி நிலையை யடைதற் கேதுவாகிய நிருவிகற்ப நிட்டையில் நிலைத்து நிறகாமல் தேகத்தைச் சுமந்து கொண்டு திரிவதில் ஒருபயனு மில்லை யென்பது கருத்து.






## வாக்காளர்களின் பொறுப்பு

உலகத்தின் நாகரிகத்துக்கும் அறிவுக்கும் தாயகமாகிய நமது இந்தியநாடு இன்று சுதந்தரமின்றி இருக்கிறதென்றாலும் சுதந்தர சூரியன் உதயமாகுங் காலம் சமீபித்துவிட்டதென்பதை எவரும் மறுக்க முடியாது. பொதுஜனப் பொறுப்பாட்சி என்னும் குடியரசு ஏற்படுங்கால் அதற்கு அஸ்திவாரமாக இருப்பவர்கள் ஓட்டர்கள் என்று சொல்லப்படும் வாக்காளர்களே யாவர். அவர்கள் தங்கள் பொறுப்பை உணராமல் இருந்து தங்கள் உரிமையைத் துஷ்பிரயோகம் செய்து விடுவார்களாயின் ஆட்சிமுறை எவ்வளவு சிறந்ததாயினும் அதனால் தேசத்திற்கு எத்தகைய நலனும் விளையாமற் போகுமென்பது திண்ணம். நமது இந்தியநாட்டிற்கு எத்தகைய அரசியல் முறையை வகுப்பது என்பதுபற்றி ஆராய்வதற்காகப் பிரிட்டிஷ் பார்லிமெண்ட் சபையினர் சமீபத்தில் நியமித்த மூன்று கமிட்டிகளில் ஒன்றான ஓட்டுரிமைக்கமிட்டி திறமை வாய்ந்த லோதியன் பிரபுவின் தலைமையில் விசாரணையைச் செய்து முடித்து, இந்த ஜூன் மாதம் 3-ந்தேதி யன்று தனது யாதாஸ்தை வெளியிட்டிருக்கிறது. அதன்படி சமஸ்தானங்களல்லாத பிரிட்டிஷ் இந்தியாவில் மட்டும் மூன்று கோடியே அறுபது லட்சம் பேர் வாக்காளர்களாகப் போகிறார்கள். இப்போது எழுபது லட்சம் பேர்களே ஓட்டர்களாக இருக்கின்றனர். இவ்வளவு திரளான ஜனங்கள் ஓட்டர்களாகும்போது அவர்கள் தங்கள் பொறுப்பை உணரவில்லையென்றால் ஓட்டர்களின் தொகையை அதிகப்படுத்தியதால் மட்டும் என்ன பலன் விளையப் போகிறது? சமீபத்தில் ஜில்லா போர்டுகள், தாலூகா போர்டுகள், முனிசிபாலிட்டிகள், பஞ்சாயத்து சபைகள் முதலிய ஸ்தலஸ்தாபனங்களுக்கும் தேர்தல்கள் நடக்கப் போகின்றன. ஆகவே இச்சமயத்தில் வாக்காளர்களின பொறுப்பை வற்புறுத்திக் கூறவேண்டியது அவசியமாகிறது. 36-கோடி இந்திய மக்களின் சுகசௌகரி

யங்களும் இந்த மூன்று கோடியே அறுபது லட்சம் வாக்காளர்களின் வசம் இருக்கின்றன வென்பதை அவர்கள் அறியவேண்டும்.

தேர்தல்கள் எவ்வளவு மோசமாக நடைபெறுகின்றன என்பது அவற்றில் கலந்துகொண்டு உழைப்பவர்களுக்கே நன்கு தெரியும். ஸ்தலஸ்தாபனங்களுக்கோ, சட்டசபைகளுக்கோ தகுதியற்றவர்களும் அபேட்சகர்களாக நிற்பதும், எவ்வித உபாயங்களைச் செய்தேனும் தேர்தலில் தாங்களே வெற்றிபெற முயல்வதும் நகைப்புக்கிடமாகவே இருக்கின்றது. நல்லறிவு, நல்லுணர்வு, நன்னோக்கம், நடுநிலைமை, நல்லுழைப்பு முதலிய அரிய குணநிசயங்களை யுடையவர்களே இத்தகைய கழகங்களில் உறுப்பினராவதற்குத் தகுதி யுடையவராவர். அப்படிப்பட்டவர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்புவதென்பது எளிய காரியமன்று. மேலும் அப்படிப்பட்டவர்கள் கிடைப்பதும் அருமை யாகவே இருக்கிறது. எத்தனையோ அபேட்சகர்கள் வாக்காளர்களை எவ்வாற்றானும் ஏமாற்றி வாக்குகளைப் பெற்றுக் கொண்டு தங்கள் முயற்சியில் வெற்றி பெறுவதிலேயே கண்ணுங் கருத்துமா யிருக்கின்றனர். ஆனால் அவர்கள் தேர்தல்களில் வெற்றி பெற்ற பின்னர் முதலில் காண்பித்த உற்சாகத்தில் பத்திலொரு பாகத்தையும் தங்கள் கடமையைச் செய்வதில் காண்பிப்பதில்லை. இத்தகையோர் பொதுநலத்துக்கெனத் தோற்றுவிக்கப்பட்ட ஸ்தாபனங்களில் அங்கம் பெறுவதால் விளையும் பயன்தான் என்னே!

ஸ்தல ஸ்தாபனங்களுக்கு ஸ்தல சுயஆட்சி என்று பெயர். சுய ஆட்சிக்கு நம்மைப் பழக்குவதற்காகவே சிறுவரம்பிற் குட்பட்ட ஸ்தல சுயஆட்சியை அரசாங்கத்தார் நம்மிடம் ஒப்படைத்திருக்கின்றனர். ஆனால் தேசம் முழுவதுக்குமே சுயஆட்சி உடனே அளிக்கப்பட வேண்டுமென்று வீரம்பேசும் நாம் இச்சிறு வரம்பிற் குட்பட்ட சுயஆட்சியை நன்கு நிர்வகித்திருக்கிறோமா என்று ஆராயப் புகுந்தால் தலையைத் தொங்கவிட வேண்டிய நிலைமையிலேயே இருப்பது பரிதாபகரமான விஷயமாகும். இதனால் எல்லா ஸ்தல ஸ்தாபனங்களுமே மோசமான நிலைமையில் இருக்கின்றன வென்று நாம் கூறுவதாகக் கொள்ளலாகாது. திறம்பட நிர்வகிக்கப் படும் ஸ்தல ஸ்தாபனங்கள் சில இருக்கலாம். எனினும் பல இடங்களிலும் நிர்வாகத் திறமையின்மையாலும், கட்சி பேதங்களாலும், அங்கத்தினர்களின் சுயநலத்தாலும் ஸ்தல ஸ்தாபனங்களின் நிலைமை சீர்கெட்டே இருக்கின்றது. ஸ்தல ஸ்தாபனங்களில் அங்கத்தினர்களாகவும், தலைவர்களாகவும் ஆனதால் செல்வர்களானவர்கள் பலர். இதனால் அவர்களைக் குறைகூற வேண்டுமென்பது நமது கருத்தன்று. தேசநலத்துக்காக ஏற்பட்ட சபைகளில் அங்கத்தினர்களாக இருக்க விரும்புவோர் அதற்கேற்ற அருகதையைப் பெற்று சமூகத்தின் நலத்தை நாடும் உயரிய குணத்தை யடையவேண்டு மென்பதே நமது அவா. பொதுஜன நன்மை எவ்வாறாயினும் அதிகாரிகளின்

தயவும், கௌரவமும் இருந்தால் போதுமெனக் கருதி அதிகாரிகளின் பிரியப்படி தலையை யாட்டும் கனவான்கள் இத்தகைய கழகங்களில் அங்கம் வகிக்க அருகதை யுடையவர்களல்லர். ஸ்தல ஸ்தாபனங்களிலோ, சட்ட சபைகளிலோ ஸ்தானம் பெற்றால் பல சுய காரியங்களுக்குச் சௌகரியமாக இருக்குமென்று எண்ணி அந்த ஸ்தானங்களைப் பெற முயல்வது நியாயத்தின் பாற்பட்ட செயலாகாது என்பதை அபேட்சகர்கள் அறிய வேண்டும். தன்னலத் தியாகம் செய்தேனும் ஊருக்கு உழைக்கவேண்டுமென்னும் பரிசுத்தமான அபிப்பிராய முடையவர்களே வாக்காளர்களின் பிரதிநிதிகளாயிருத்தல் தேசத்துக்கு நன்மையைத் தரும்.

### கண்டிக்கத் தக்க வழக்கங்கள்.

இதுவரை அபேட்சகர்களைபபற்றிக் கூறினோம். இப்போது வாக்காளர்களைப்பற்றிச் சிலவற்றைக் கூற விரும்புகிறோம். வாக்காளர்கள் தங்களுக்குக் கிடைத்துள்ள உரிமையின் பரிசுத்தத் தன்மையையும், அதை உபயோகிக்க வேண்டிய முறைமையையும் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம். வாக்காளர்கள் தங்களுடைய பிரதிநிதிகளாக யாரைத் தெரிந்தெடுப்பது என்பதில் சர்வ ஜாக்கிரதையுடன் இருக்க வேண்டும். அபேட்சகர்கள் செல்வவந்தர், செல்வாக்குடையவர் சுற்றத்தார், நண்பர்கள், வட்டிக்குப் பணம் கொடுப்பவர் என்னும் காரணத்துக்காகவெல்லாம் அவர்களுக்கு ஓட் கொடுத்து விடக்கூடாது. வாக்காளர்கள் கேவலம் பணம் பெற்றுக்கொண்டு ஓட் கொடுப்பதென்பது பலமாகக் கண்டிக்கத் தக்க வழக்கமாகும். பற்பல கட்சிகளையும் சேர்ந்தவர்கள் போட்டி போட்டுக்கொண்டு பாமரமக்களான ஓட்டர்களைப் பல கெட்ட வழக்கங்களுக்கும் உட்படுத்துவது மானங்கெட்ட செயலாகும். படித்தவர்களென்றும், தேச நன்மைக்காகப் பாடுபடுகிறவர்களென்றும் கூறிக்கொள்ளும் கட்சியினர்களும் இவ்வாறு செய்வதும், தேர்தல் போட்டியில் ஒருவரை யொருவர் துஷித்துக் கொள்வதும, அடித்துக் கொள்வதும் அருவருக்கத்தக்க செயல்களாகும். நாகரிகமும் கல்வியும் தங்களுக்கு இருப்பதாகக் கூறிக்கொள்ளும் நகர வாசிகளே நாணயங்கெட்ட தன்மையில் ஓட்டுரிமையைத் துஷ்பிரயோகம் செய்கிறார்களென்றால் இப்பால் கிராமவாசிகளும் இந்தச் சூழற்காற்றில் அகப்பட்டுக் கொண்டு விட்டதுதான் வருந்தத் தக்க விஷயமாய் இருக்கிறது. வாக்காளர்கள், பதவிகளை விரும்புவோர் அதற்குத் தகுதியுடையவர்களா என்பதையும் ஆராயாமல் யார் அதிகத் தொகை கொடுக்கிறார்களோ அவர்களே வெற்றி பெறுவதற்குரியவர் என்று கருதிவிடுகின்றனர். லஞ்சம் வாங்குவதற்கோ பேசுவதற்கோ சிறிதும் கூசுவதில்லை. கோயிலுக்கென்றும், குளத்துக்கென்றும், தர்மத்துக்கென்றும், இன்னும் பற்பல காரியங்களுக்கென்றும் அபேட்சகர்களிடம் பணம் பெற்றுக்கொள்ளச் சிறிதும் பின் வாங்குவதில்லை. அபேட்சகர்களாக நிற்போர்

அளிக்கும் அன்னத்தைப் புசித்தும், வழங்கும் மதுபானம் முதலிய வற்றை அருந்தியும் அபேட்சகர்களின் ஆட்கள் ஓட்டும் மந்தையாக ஓடித் தகாத மனிதர்களுக்கு வாக்குகளை அளிக்கும் வழக்கம் என்று நம் நாட்டைவிட்டுத் தொலையுமோ அக்காலத்தில்தான் நமதுநாடு முன்னேற்றமடைய முடியும். இன்னும் தேர்தல் காலங்களில் நடை பெறும் அக்கிரமங்கள் பலப் பல. வாக்காளர்கள் இத்தகைய உபா யங்களுக்கெல்லாம் சிறிதும் இடந்தாமல் பதவிகளுக்கு உரியவர்க ளையே தேர்ந்தெடுத்து அனுப்ப வேண்டும். அவ்வாறில்லையென் றால் நாட்டின் ஆட்சிமுறையில் நமக்கு அதிக உரிமைகள் வழங்கப் பட்டிருப்பினும் அவ்வுரிமைகளைத் திறமையுடனும் உண்மையுடனும் வைத்து ஆளக்கூடிய தன்மை நமக்கு இன்னும் வாய்க்கவில்லை என்றே கருதப்படும். அந்நியநாட்டார் நம்மை நன்கு மதிக்க வேண் டும் என்று விரும்புகிறவர்கள் இத்தகைய குறைபாடுகளை ஒழிக்க முயலவேணடும். சமீபத்தில் நடைபெறப்போகும் தேர்தல்களில் வாக்காளர் ஒவ்வொருவரும் தத்தம் கடமையை உணர்ந்து தகுதி யுடையவர்களையே தேர்ந்தெடுத்தனுப்புதல் வேண்டும். தகுதியற்றவர் கள் பணத்தைக் கொடுத்தோ, அதிகாரத்தால் பயமுறுத்தியோ, செல் வாக்கு, நயவஞ்சகம் முதலியவற்றால் மயக்கியோ வாக்காளர்களின் வாக்குகளைப் பெற முயலுங்கால் வாக்காளர்கள் மன உறுதியுடனும், துணிவுடனும் இருந்து தக்கவர்களுக்கே தங்கள் வாக்குகளைக் கொடுக்க வேண்டும். வாக்காளர்கள் தங்கள் கடமையை உணர்ந்து நேர்மையான வழியில் தங்கள் உரிமையைச் செலுத்தினாலொழிய நாடு நலங்குன்றிப் பாழ்படும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. சமீபத் தில் வெளியான லோதியன் கமிட்டி யாதாஸ்திலும், "நாட்டுப்புறங்க ளில் தேர்தல் விஷயம் தெரியாவிட்டாலும் ராஜீய உணர்ச்சி வியாபக மாய் இருக்கிறது. ஆதலின் புதிதாகச் சிருஷ்டிக்கப்படும் வாக்காளர் கள் புத்திசாலித்தனமாகவே தங்கள் உரிமையைச் செலுத்துவார்கள் என்பதில் ஆட்சேபமில்லை" என்று கூறப்பட்டிருக்கிறது. ஆங்கிலே யர்களும் இந்தியர்களு மடங்கிய அக்கமிட்டி வாக்காளர்களிடம் கொண்டுள்ள நம்பிக்கை மெய்யானதாகவே இருக்கும்படி வாக்கா ளர்கள் புத்திசாலித் தனத்துடன் நடந்துகொள்ள வேண்டுமென்று பெரிதும் அவாவுகின்றோம்.

## அபேட்சகர்கள் கடமை.

இப்போது நமது நாடு உள்ள நிலைமையில் சில தேசீயத் திட் டங்களைப் பொதுஜனங்களின் பிரதிநிதிகள் நிறைவேற்றி வைக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அத்திட்டங்கள் எவையென்று வாக்கா ளர்கள் தெரிந்துகொண்டால் அவற்றை நிறைவேற்றிவைப்பதாகவாக் களிக்கும் அபேட்சகர்களுக்கே அவர்கள் தங்கள் வாக்குகளை யளிக் கச் சௌகரியமாக இருக்குமாதலின் அத்திட்டங்கள் இன்னவை யென்று கீழே குறிப்பிடுகின்றோம்: நாட்டின் பொருளாதாரம் அபி

விருத்தியடையவேண்டுமாயின், வறுமை நீங்கவேண்டுமாயின், தொழி லில்லாத் திண்டாட்டம் ஒழிய வேண்டுமாயின் நாட்டில் கைத் தொழில் அபிவிருத்தி ஏற்பட வேண்டியது அவசியமாக இருத்தலின் கைராட்டினம் போன்ற குடிசைத் தொழில்களின் அபிவிருத்தியைக் கோருவதும், சுதேசியம் நாட்டில் பரவுவதற் கேற்ற முறைகளை அநுஷ்டிப்பதும் பிரதிநிதிகளின் முக்கிய கடமையாக இருக்க வேண் டும். மக்களின் செல்வத்தையும், அறிவையும், ஆன்ம அபிவிருத்தியை யும் அழிப்பதும், எல்லா மதக் கோட்பாடுகளுக்கும் ஒழுக்கத்துக்கும் முரணுயிருப்பதுமான மதுபான வழக்கத்தை அடியோடு தொலைக்க முயலுதல் வேண்டும். இந்நாட்டில் இப்போது மரணங்களும், நோய் களும் அளவுகடந்த முறையில் பெருகியிருப்பதால் நவீன சாஸ்திரீய முறைகளுக்கேற்ற சுகாதார, வைத்திய வசதிகளைப் பிரஜைகளுக்கு ஏற்படுத்திக் கொடுக்கவேண்டியது பிரதிநிதிகளின் இன்றியமை யாக் கடமையாகும். நம்நாட்டிலேயே பிறந்து வளர்ந்து நமது சகோதரர்களாகவுள்ள ஒரு வகுப்பினரைத் தாழ்த்தப்பட்டவர்க ளென்றும் தீண்டத் தகாதவர்களென்றும் சொல்லித் தேசத்தின் பிர ஜைகள் என்னும் முறையில் அவர்கள் அனுபவிக்க உரிமையுள்ள வசதிகளையும் அளிக்காமல் பலவித இடையூறுகளுக்கு மிடையில் துயரம் நிறைந்த வாழ்க்கையை அநுஷ்டிக்கும்படிவிட்டு வைத் திருப்பது மானுஷீகத் தன்மைக்கும், பிரஜா உரிமைக்கும், உண் மையான மத உணர்ச்சிக்கும் விரோதமானதாக இருப்பதால் தீண்டாமையை யொழித்து அச் சமூகத்தார் பற்பல துறைகளி லும் முன்னேற்ற மடையும்படியான வசதிகளை எற்படுத்திக்கொடுக்க வேண்டியது மிக அவசரமும் அவசியமுமான திட்டமாகும். பொது வாகவே நாட்டில் நூற்றுக்கு ஏழு பேரே எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாக இருப்பதாலும், கல்வியின்மை காரணமாக அறி யாமை நிரம்பியிருப்பின் நாடு எவ்வகையிலும் சீர்திருந்த இயலா தாகையாலும் கல்வி அபிவிருத்தி அதிகப்படும்படி சௌகரியங்களைச் செய்து தரல் வேண்டும். நம்நாட்டில் பல மதத்தினர்கள் இருப்ப தாலும், நாட்டின் முன்னேற்றத்துக்கு தேசீய ஒற்றுமை அவசியமா யிருப்பதாலும் சமத்வ உணர்வு பரவ வேண்டியது அவசியமாக இருப்பதால் அதை நிறைவேற்றக்கூடிய உள்ள முடையவர்களாகப் பிரதிநிதிகள் இருத்தல் அவசியம். இத்தியாதி காரியங்களைச் செய்து முடிக்க வல்ல ஊழியர்களையே வாக்காளர்கள் தங்கள் பிரதிநிதிகளா கத் தேர்ந்தெடுக்க வேண்டும். வாக்காளர்கள் தங்கள் பொறுப்பை உணர்ந்து நடந்து அதன் மூலம் பண்டைப் பெருமை வாய்ந்த நமது இந்தியத்தாய் சீரும் சிறப்பும் பெற்று உயர்வடையுமாறு அருள் புரிய வேண்டுமென்று விரும்புவார்க்கு விரும்பியதை அளித்துக் காக்கும் எம்பெருமானை இறைஞ்சுகின்றோம்.

ஓம் தத் ஸத்.

# நேயர்கட்கு ஒரு வேண்டுகோள்.

## 18-வது ஆண்டின் முன்னறிக்கை.

எமது அன்பார்ந்த நேயர்காள்!

நமது 'ஆனந்தபோதினி' மாத சஞ்சிகைக்கு நாளிது ஆங்கீரஸ வருஷம ஆடிமீ 1௳ (16-7-32) யன்று 18-வது ஆண்டு பிறக்கப் போகிறது. நாம் இந்த ஆனிமீ சஞ்சிகையையே 18-வது ஆண்டின் சந்தாவுக்காக வழக்கம்போல் வி-பி-யில் அனுப்புவதென்று தீர்மானித்திருந்ததுடன் சென்றமாத சஞ்சிகையிலும அதை நேயர்களுக்குத் தெரிவித்திருந்தோம். எனினும் சந்தா நேயர்களில், வக்கீல்களா யிருப்போருக்குக் கோர்ட்டுகள் மூடப்பட் டிருப்பதாலும், மாணவர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் பாடசாலைகள் மூடப்பட் டிருப்பதாலும், வியாபாரிகளுக்கும, மற்றும் பல துறைகளிலுள்ளவர்களுக்கும் சகஜமாகவே பொருளாதார நெருக்கடி ஏற்பட்டிருப்பதாலும், பல சந்தாதாரர்களும் கடித மூலமாகவும் நேரிலும் இத்தகைய தங்களுடைய அசௌகரியங்களை அறிவித்திருப்பதாலும், இச்சமயத்தில் வி-பி-யை அனுப்பிச் சிரமத்தைக் கொடுப்பதைவிட இன்னும் ஒருமாத கால தவணை கொடுத்து அடுத்த ஆடிமீ மாத சஞ்சிகையை வி-பி-யில் அனுப்புவதென்று நிச்சயித்திருக்கிறோம. ஆதலின் சந்தா நேயர்களனைவரும் 18-வது ஆண்டின் சந்தாத் தொகையை ஆனிமீ 31-ந்தேதி (14-7-32)க்குள் மணியார்டர் மூலமாகவோ நேரிலோ எங்களுக்குக் கிடைக்கும்படி செய்யவேண்டுகிறோம். இந்த ஒரு மாத காலத்துக்குள் பெரும்பான்மையான நேயர்களின் சந்தாத் தொகை கிடைத்து விடுமாதலின் ஒரு சிலருக்கே வி-பி. செய்ய நேரிடுமாதலால் எமக்கும் சிறிது சௌகரியமாகவே இருக்கும். **மேலும் வி-பி-யில் பெற்றுக்கொள்வதால் 6-அணா அதிகச் செலவாகிறதென்பதையும், மணியார்டர் மூலம் சந்தாவை அனுப்பிவிடுவதால் 2-அணாவே செலவாகிற தென்பதையும் நேயர்கள் அறியவேண்டுகிறோம்.** சந்தாநேயர்களை எப்பொழுதும் இன்பக் கடலில் திளைக்குமாறு செய்துவரும் 'ஆனந்தபோதினி'யை நேயர்கள் அனைவரும் வழக்கம்போல் அன்புடன் ஆதரித்து வருவார்களென்று நிச்சயமாக நம்புகின்றோம். ஒவ்வொரு சந்தா நேயரும் தங்களாலியன்ற புதிய சந்தா நேயர்களைச் சேர்த்துக் கொடுத்து எமக்கு உற்சாக மூட்டவேண்டுமென்றும் வேண்டுகின்றோம்.

பத்திராதிபர்.




# ஸ்ரீ. விபின சந்திர பாலர்.



வங்காள பிரிவினைக் காலத்திலும், அதற்குப் பின்னும் பெருந்தேச பக்தராக விளங்கிய ஸ்ரீ. விபின சந்திரபாலர் (23-5-32) மாலை கல்கத்தாவில் மரண மடைந்தார்.

தமது 74-வது வயதில் மரண மடைந்த ஸ்ரீ. விபின சந்திர பாலர், பழம் பெரும் தேச பக்தர்களான வீரர்களில் ஒருவர். அவர் 1858-ம் வருஷம் வங்காளத்திலுள்ள சில்ஹெட் ஜில்லாவில் ஜனன மானார். அவர் ஜில்லா முனிசீப்பாக இருந்த ஸ்ரீ ராமசந்திர பாலரின் ஏக புத்திரர். காலஞ் சென்ற ஸ்ரீ. விபின சந்திரர் மிகவும் இளம்பிராயத்திலேயே மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேறி விட்டதால், கலாசாலையில் சேருவதற்காக அவரைப் பெற்றோர்கள் கல்கத்தாவிற்கு அனுப்பினர். அவர் கல்கத்தா சென்றதும் அவரது வாழ்க்கையிலேயே ஓர் புதிய மாறுதல் ஏற்பட்டு விட்டது. அதாவது அச்சமயம் காலஞ்சென்ற கேசவசந்திரசேனர் அவரது அபாரமான வாசால சக்தியால், வங்காள யுவர்களிடை உணர்ச்சி யாகிற அக்னியைக் கொழுந்து விட்டெரியும்படி செய்து வந்தார். ஸ்ரீ விபின சந்திரரும் பாபு சேனரின் சிஷ்ய ராகி விட்டார். அதன் பயனாக அவர் பிரம்ம சமாஜத்திலும் சேர்ந்தார். அவரை பிரம்ம சமாஜத்தில் சேராம லிருக்கும்படி தடுக்க அவரது தந்தையும் உறவினர்களும் எவ்வளவோ பகீரதப் பிரயத்தனம் செய்தும் அவர்கள் முயற்சி வீணாகியது.

தமது முயற்சி வீணானதைக்கண்டு ஸ்ரீ. விபின சந்திரரின் தந்தை அடங்காத கோபங்கொண்டு, தமது சொத்திற்குத் தம் குமாரன் உரியவனல்லவென மரண சாஸனம் எழுதி வைத்ததுடன், பிதுரு வாக்கியத்தை மீறிய அவரது முகத்திலும் விழிப்பதில்லை யென்றும் பிரதிக்ஞை செய்து கொண்டார். ஆயினும் பெற்ற பாசம் யாரை விட்டது! அந்திய காலத்தில் ஸ்ரீ. விபின சந்திர பாலரின் தந்தை மரணமடையும் தருவாயில் தாம பிரதிக்ஞை செய்து கொண்டதைக் குறித்து பச்சாத்தாப மடைந்து தமது புதல்வரை அழைத்து வரும்படி செய்து, தமது ஏக புதல்வனுக்கே தமது சொத்தை யெல்லாம் கொடுத்தார்.

### அஞ்சா நெஞ்சம்

தமது தந்தை தம்மைத்திரஸ்காரம செய்து விட்டதால் இளைஞரான ஸ்ரீ. விபின சந்திரர் தமது படிப்பை நிறுத்தித் தமது ஜீவனத்திற்குத் தாமே வழி தேடும்படியாகி விட்டது. அச்சமயம் அவர் பட்ட கஷ்டம கொஞ்சமல்ல.

ஆயினும் விதியைத் தடுப்பது வீணென்ற எண்ணத்துடன் அவர் தமது கஷ்டத்தைப் பொருட் படுத்தாது உற்சாகத்துடனேயே இருந்து வந்தார். கலாசாலையில் சேர்ந்து அவருக்குக் கல்வி கற்க முடியாமற் போய்விட்டதெனினும், தாம் கல்வி யறிஞராகப் பிரகாசிக்க வேண்டுமென்ற பேரவா அவரை உற்சாகப்படுத்தியது. எனவே அவர் தமது அறிவை அபாரமாக விருத்தி செய்து கொள்ளுவதில் தமது முழு கவனத்தையும் செலுத்தி அதி தீவிரமாக உழைக்க ஆரம்பித்தார். அதன் பயனாக அவர் கலாசாலைகளில் தேர்ந்த மேதாவிகளைக் காட்டிலும் மகா மேதாவியாகி விட்டாரென்பதை ஒருவரும் மறுக்க முடியாது.

## உபாத்தியாயர் பதவி

தமது ஜீவனத்திற்குக் கஷ்டப்படும்படியான நிலைமை ஏற்பட்டபோது, அவர் சிரமப்பட்டு முயற்சி செய்து கட்டாக் ஹைஸ்கூலில் தலைமை உபாத்தியாயர் பதவியை ஏற்றுக் கொண்டு, அந்த உத்தியோகத்தில் மூன்று வருஷகால மிருந்தார். அவரது தந்தை தமது சொத்தை ஸ்ரீபாலருக்கே கொடுத்துவிட்டு மரண மடைந்ததால், அவர் ஷை உத்யோகத்தை விட்டுவிட்டுத் தமது இருப்பிடம் சென்று தமது சொத்தின் உதவியால் அங்கு ஹைஸ்கூலை ஆரம்பித்தார். சிலகாலம் வரையில் அந்த கல்விச்சாலை செவ்வனே நடைபெற்றதெனினும் திடீரென அது முறிந்துவிட்டது. ஷை கல்விச்சாலை ஏற்படுத்தியதின் பயனாக அதிக செலவு ஏர்பட்டு அவர் தமது பிதுரார்ஜித சொத்தை இழந்தார். எனவே பின்னர் மீண்டும் தமது உழைப்பினாலேயே ஜீவனம் செய்யும்படியான நிலைமை அவருக்கு ஏற்பட்டது. பின்னர் அவர் பெங்களூர் சென்று அங்கு ராவ்பகதூர் ஆற்காடு நாராயணசாமி முதலியாரால் ஸ்தாபிக்கப் பெற்ற ஐஸ்கூலில் தலைமை உபாத்தியாயராக அமர்ந்து இரண்டு வருஷங்களுக்குப் பின்னால் அந்த உததியோகத்தை விட்டுவிட்டார். அச்சமயம் அவர் பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த ஓர் பெண்ணையும் விவாகம் செய்து கொண்டார். பெங்களூரைவிட்டு அவர் சென்றதும் கல்கத்தாவிலுள்ள புத்தகசாலையில் மாதம் 100-ரூபா சம்பளத்திற்கு லைப்ரேரியனாக அமர்ந்து அங்குள்ள, அரிய புத்தகங்களை வாசித்து அறிவை அபாரமாக விருத்தி செய்து கொண்டார். இச்சமயம் அவரது மனைவி மாண்டதால் அவர் மனமுடைந்து சாதுக்களுடன் சேர்ந்துகொண்டு சில நாட்கள் வரை சத் சங்கத்தில் தமது காலத்தைக் கழித்துவந்தார். மனைவி மாண்ட துக்கம் ஒருவாறு தீர்ந்தது. அவருக்கு மீண்டும் உலகப் பற்றுதல் உதயமாயிற்று. எனவே அவர் தமது 'சந்நியாசி வாழ்க்கையை விடுத்து வங்க வீரரான காலஞ்சென்ற சுரேந்திரநாத பானர்ஜியின் மருமகளும் விதவையுமான ஓர் பெண்ணை விவாகம் செய்து கொண்டார். பின்னர் அவருக்கு 3 பிள்ளைகளும் 4-புத்திரிகளும் பிறந்தார்கள்.

## பொது ஜன ஊழியம்.

இதனபின் அவர் பொதுஜன சேவையில் கவனம் செலுத்த ஆரம்பித்தார். அச்சமயம் காலஞ் சென்ற காளி சரண பானர்ஜி கிறிஸ்துவ மதத்தை பிரமாதமாகப் புகழ்ந்தும் பிரம்ம சமாஜத்தைக் கண்டித்தும் பிரசங்கங்கள் செய்து வந்ததால், ஸ்ரீ. விபினசந்திரர் கோபமடைந்து பிரம்ம சமாஜத்தைப் புகழ்ந்து பிரசங்கங்கள் செய்ய ஆரம்பித்தார். அப்போதுதான் அவரது அறிவையும் ஆண்மையையும் வாச்சாலக சக்தியையும் யாவரும் அறிந்து கொண்டனர். சென்னையில் இந்திய தேசிய மகாசபை காங்கிரசின் 3-வது மகாநாட்டில் ஆயுத

சட்டத்தை ரத்து செய்ய வேண்டுமென அவர் செய்த பிரசங்கமானது மிக வும் குறிப்பிடத் தகுந்தது.

### ஆக்ஸ்போர்டில் கல்வி

1900-ம் வருஷம் அவர் மத சித்தாந்த கல்விக்காக ஆக்ஸ்போர்டுக்குச் சென்றார். ஒரே வருஷத்தில் அவர் அங்கு தேர்ச்சி பெற்று இங்கிலாந்து பிரான்ஸ், அமெரிக்கா முதலிய தேசங்களுக்கு யாத்திரை செய்து 1901-ம் வருஷம் இந்தியா திரும்பிவந்து சேர்ந்தார். பின்னர் அவர் 'நியூ இந்தியா' என ஓர் வாராந்த பத்திரிகை ஆரம்பித்து வெகு சாமர்த்தியத்துடன் நடத்தி வந்தார். 1901-02-ம் வருஷங்களில் அவர் தென்னிந்தியா விஜயம் செய்து பிரம்ம சமாஜ கொள்கைகளைப் பிரசாரம் செய்துவந்தார்.

### வங்காளப் பிரிவினை

வங்காள பிரிவினைக்குப் பின்னர் அவர் செய்த காரியங்கள்தான் அவரது வாழ்க்கையில் முக்கியமான படலமாகும். வங்காள பிரிவினையைக் கண்டித்து அவர் செய்த பிரசங்கங்கள் மிகவும் புகழத்தக்கதாகும். பின்னர் 'வந்தே மாதரம்' என்ற ஓர் பத்திரிகையையும் அவர் ஆரம்பித்தார்.

### சென்னை விஜயம்

பின்னர் தென்னிந்தியர்களின் வேண்டுகோளுக் கிணங்க அவர் 1907ம் வருடம் மே மாதம் சென்னை வந்து சென்னை கடற்கரையில் ஆறு நாட்கள் அரிய பிரசங்கங்கள் செய்தார். அவரது கர்ஜனையைக் கேட்கப் பிரதிதின மும் ஆயிரக் கணக்கான ஜனங்கள் கூடினர். அவர் சென்னையில் செய்த பிரசங்கங்களை லண்டன் 'டைம்ஸ்,' 'ஸ்பெக்டேடர்,' போன்ற பத்திரிகைகள் கூடப் புகழ்ந்தன. இச்சமயம் லாலா லஜபதிராய், ஸ்ரீ அஜிதசிங் இருவரை யும் சர்க்கார் நாடு கடத்திவிட்டதால் அவர் கல்கத்தாவுக்கு திரும்பிச் சென்றார்.

### தேசபக்தர் ஆண்மை.

1902-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் பாபு அரவிந்தகோஷ் மீது நடந்த ராஜத்துவேஷ வழக்கில் சாட்சி கூறும்படியாக அவரை அதிகாரிகள் அழைத்தார்கள். அவர் சாட்சிக் கூண்டில் ஏறி தேசத்துக்கு விரோதமாக சாக்ஷி கொடுக்க முடியாதென மறுத்துவிட்டார். அதனால் அவருக்கு கோர்ட்டார் 6 மாதம் வெறுங்காவல் தண்டனை விதித்தனர். சிறையில் அவர் ஹிந்து மதத்தைப் பற்றி இரு புத்தகங்கள் எழுதினர். 1908-ம் வருஷம் மீண்டும் அவர் இங்கிலாந்து சென்று அங்கு 'சுயராஜ்யா' என்ற பத்திரிகை ஆரம்பித்து சாமர்த்தியமாக நடத்திவந்தார். அவர் பிறகு இந்தியா திருமபிவந்துவிட்டா ரெனினும் அதன் பின் அவரது வாழ்க்கையில் நடைபெற்ற சம்பவங்களில் விசேஷம் ஒன்றுமில்லை. அந்திய காலத்தில் அவர் காங்கிரஸ் கொள்கைகளுக்கு மாறுபாடாக ஆங்கிலோ இந்திய பத்திரிகைகளில் கட்டுரைகள் எழுதிவந்தா ரெனினும் இந்தியா முன்னேற்றத்திற்கு விரோதமாக அவர் எதுவும் கூறிய தில்லை. அதாவது அந்திய காலத்தில் அவர் தீவிரமாக தேசிய விஷயங்களில் கலந்துகொள்ளாமல் மிதவாதியாகவே காலங் கழித்தார். அவர் தமது வாழ்க்கை சரிதம் ஒன்றை தாமே சமீபத்தில்தான் எழுதிமுடித்தார்.

# பீஸ்! பீஸ்!! பீஸ்!!!

(சமய சஞ்சீவி.)

வக்கீலிடம் எதைப்பற்றியாவது யோசனை கேட்கப்போனால் ஏதோ ஒரு வழக்கைக் கற்பனை செய்து கொஞ்சகாலம் வரை அதை ஆதாரமாக வைத்துக்கொண்டு பணத்தை உறிஞ்சி விடுகிறார்.

டாக்டரிடம் எதற்காவது யோசனை கேட்கப்போனால் அவர் ஏதோ ஒரு நோய் கண்டுபிடித்து அதைக்கொண்டு தம் காலங்கடத்தப் பார்க்கிறார். என் பணத்தாலே, எந்தத் தொழிலில் இருப்பவராயினும் சரி—யோசனைக்கு என்று போனால் பணம் தட்டாமல் விடமாட்டார். இது எனக்கு அநுபவமானதால் நானும் அவர்களுடன் என்னை ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டு தீர்க்காலோசனையில் ஆழ்ந்தேன். நானும் ஏன் பணம் சம்பாதிக்கக்கூடாது என்று எண்ணினேன். ஆனால் நல்லது கெட்டது இல்லையா? நியாயம் அநியாயம் கவனிக்க வேண்டாமா? என்றும் நினைத்தேன். பிறகு மேனாட்டு நாகரிக வெள்ளம் கரை புரண்டு ஓடிக்கொண்டிருக்கும் இக்காலத்திலே இந்தக் குதர்க்கங்களில் விழுந்து மாட்டிக்கொள்ளுவது முட்டாள் தனம் என்று முடிவு கட்டினேன்.

சரி, இனி நான் பணம் தேடும் வழி என்ன என்று ஆராயத் தொடங்கினேன். கவிராயர்களில் அநேகம் என்னுடைய நண்பர்கள். அநேக நாவல் ஆசிரியர்களையும் நான் அறிவேன். அவர்கள் எல்லாரும் தவறாமல் தாங்கள் எழுதிய கவிகளையோ கதைகளையோ என்னிடம் காட்ட வருவார்கள். "தயவு செய்து இதைக் கொஞ்சம் படித்து உங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவிக்க வேண்டும். இதை நான் கொஞ்சம் அவசர அவசரமாக எழுதி முடித்தபடியால் அங்கங்கே பிழைகளுங்கூட இருக்கலாம். சற்றேகவனமாகப் படித்துப் பிழைகள் இருக்கும் இடத்தில் அடையாளம் செய்து வையுங்கள்" என்று எத்தனையோ பேர் இதுவரை தொந்தரவு கொடுத்திருக்கிறார்கள்.

யாரோ எதையோ எழுதினால் நான் ஏன் அதைப் படிக்கவேண்டும்? நான் எதற்காக அபிப்பிராயங் கொடுக்கவேண்டும்? நான் எதற்காகப் பிழைகளைக் காட்டவேண்டும்? இந்தத் தொல்லையெல்லாம் எனக்கு எதற்காக? டாக்டரிடம் போய், "என்ன டாக்டர்வாள்! நான் நோய் கொண்டிருக்கிறேன். கொஞ்சம் ஜாக்கிரதையாய்ப் பரிசோதனை செய்து பார்த்து ஏதாவது மருந்து கொடுங்கள்" என்றால் அவர் மருந்தைச் சும்மா கொடுப்பாரா? நான் மாத்திரம் ஏன் சும்மா பார்க்கவேண்டும்?—செய்ய வேண்டுமா? அதனால் இந்த வேலைக்கு நானும் சிறிது பீஸ் சார்ஜ் செய்யவேண்டும் என்று ஒரு ரூபாய் ஏற்பாடு செய்கிறேன் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்பொழுது வக்கீல்கட்கும், டாக்டர்கட்கும் கேட்ட தொகை கேட்ட விடத்திலேயே எடுத்துக் கொடுக்கிறார்களே—அதுபோல் எனக்கும் இந்த ஒரு ரூபாயைக் கொடுப்பார்களா? கொடுக்க மாட்டார்கள். "இத்தகைய காரியம் செய்வது

தருமமா ஐயா? உங்களிடம் அபிப்பிராயம் கேட்கவந்தால் அதை ஒரு கௌரவமாக நினைக்காமல்—சிரமமாக நினைத்துக்கொண்டு ரூபாய் கேட்கிறீர்களே! என்னுடைய நூலுக்குத் தாங்கள் அபிப்பிராயம் கொடுத்தால் சீக்கிரத்தில் அச்சுக்குக் கொடுக்க உத்தேசம். ஆனால் உங்களுக்கு எவ்வளவு பெருமை! உங்கள் அபிப்பிராயத்தை அச்சில் பதிப்பிக்க நான் உங்களை ஒரு தம்பிடி கூட கேட்கமாட்டேன். இம்மாத்திரம் நன்றியறிதலுங்கூட இல்லையா? இன்றைக்கு நான், உங்கள் அபிப்பிராயத்தைப் புத்தகத்தில் வெளியிட்டேனென்றால் நாளை முதல் எத்தனையோ பேர் உங்கள் மதிப்புரைக்காகக் கடிதத்தின் மேல் கடிதம் எழுதுவார்களே! சிறிது காலத்தில் உங்கள் பெரும் புகழும் திக்கெல்லாம் பரவிவிடுமே! இப்பொழுது அபிப்பிராயம் கேட்டவுடன் பணம் வேண்டும் என்கிறீர்கள். எதிர்கால லாபத்தை நீங்கள் சிறிதேனும் கவனிக்கவில்லை" என்று உபந்நியாசம் செய்யத் தொடங்கிவிடுவார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. ஒரு தரம் சங்கற்பம் செய்துகொண்டபிறகு அதை மாற்றுவது புத்திமான்கட்கு அழகல்ல என்று எண்ணி நானும் பிடிவாதமாய் ஒரு ரூபாய் ஏற்பாட்டைக் கைவிடவில்லை. படித்துப் பார்க்கிலோ, அபிப்பிராயம் சொல்லலோ—எதுவாயினும் சரி ரூபாய் ஒன்று இல்லாமல் கையில் தொடுவதில்லையென்று உறுதி செய்துகொண்டேன். இந்நிலையில் ஒரு சிலர் "ஏதோ பெரிய மனிதர் என்றெண்ணி அபிப்பிராயங் கேட்கவந்தால்—ரூபாய் வேண்டுமென்று கேட்கிறார். இவரது அபிப்பிராயம் இல்லையென்றால் என்ன மூழ்கிவிடும்? எந்தப் புஸ்தகமானாலும் சரி—அபிப்பிராயம் வேண்டும் என்று கேட்டால் உடனே கொடுக்கின்றவர் லக்ஷம் பேர் இருக்கிறார்கள். தமிழ் நாடு பாழடைந்துவிட்டது என்று நினைத்துக்கொண்டார்போலிருக்கிறது" என்று திட்டத் தொடங்கிவிடுகிறார்கள். இப்பேர்ப்பட்ட நிலைமைகளில் பணம் சம்பாதிப்பது எப்படி? எனது யோசனை எதற்கும் எட்டவில்லை. முதன் முதல்—புதிதாயிருப்பதினால் நூலாசிரியர்கள் சந்தேகித்தாலும் பின்னர் நாளாவட்டத்தில் பணங்கொடுக்கக் கற்றுக்கொள்ளுவார்கள் என்று எண்ணுகிறேன் இன்றேல் இவர்களுடைய புத்தகங்களை யார் கையில் தொடுவார்கள்?—ஸ்கூல் பைனல்—இண்டர்மீடியட் பாட புஸ்தக நியமன கர்த்தாக்களைத் தவிர—பணங் கிடைப்பதாயிருந்தால் நானும் எந்தப் புஸ்தகத்தையும் சிரமப்பட்டுப் படிக்கத் தயாராயிருக்கிறேன். இது நிற்க, இனி, சம்பாஷணை செய்வதற்கும் பணம் கேட்கத்தக்க சில ஆசாமிகளைக் குறித்துச் சொல்லுகிறேன். சில பெரிய மனிதர்கள் அறிமுகமானவர்களிடமெல்லாம் ஸ்நேகம் பாராட்டிக்கொண்டு—சமயாசமயங்களைக் கவனிக்காமல்—அவர்களைப் பார்ப்பதற்கு என்றும், அவர்களுடன் பேசுவதற்கு என்றும் வீடுகளில் வந்து உட்கார்ந்து விடுகிறார்கள். இந்த ஆசாமிகள் வந்து சாதிக்கும் காரியம் என்ன? ஒன்று: நீங்கள் செய்துகொண்டிருக்கும் காரியத்தைக் கெடுப்பது. இரண்டு: உங்களுக்கு அனுகூலமாயினும் விருப்பம் இல்லாத விஷயங்களைக் குறித்துப் பிரசங்கம் செய்து—அதைக் கேட்டுச் சமாதானம் சொல்ல உங்களிடம் இச்சகம் பேசி எதிர்பார்ப்பது. மூன்று: தூங்கிக்கொண்டிருக்கும் உங்கள் குழந்தைகளை எழுப்பி, இல்லாத அன்பு இருப்பதாக நடித்து, அவர்கட்கு முத்தங்கொடுத்து சிரிப்புக்காட்டி, அவர்களை ஓடச் செய்து, அழச் செய்து, பிறகு அழுகை ஓயும்முன்பே எழுந்து போவது. நான்கு: தாகம் இல்லாமல் இருந்தாலும் தண்ணீர் வரவழைத்துக்கொண்டு—பரிசோதனை செய்து பார்த்துப் பாதித் தண்ணீர் குடித்துப் பாக்கியைக் கீழே ஊற்றிவிடு

வது. ஐந்து: உங்களுடைய வெற்றிலைப் பெட்டி—பொடி டப்பி—சிகரெட்டுப் பெட்டி முதலியவைகளைப் பூர்த்தியாய்க் காலி செய்து விடுவது. ஆறு: நீங்கள் எந்த லைப்ரெரியிலாவது அருமையாக வாங்கிப் படித்துக்கொண்டிருக்கும் புஸ்தகத்தை எடுத்துக் கொண்டுபோய் எறிந்து விடுவது. அந்தப் புஸ்தக விலையை நீங்களே கொடுத்து விடுவது முதலியன.

இத்தகைய பேர்வழிகள் உங்களிடம் சம்பாஷிக்க வரும்போது ஐட்டம் ஒன்றுக்கு ஒரு ரூபாய் பீஸ் சார்ஜ் செய்யவேண்டும் என்று உங்கள் மனதில் தோன்றுமா, தோன்றாதா? ஏன் ரூபாய் வாங்கிக்கொள்ளக் கூடாது? நாகரிகம், நாகரிகம் என்கிறார்கள்—இந்த அளவுக்காவது பீஸ் கிடைக்காத நாகரிகம் என்ன நாகரிகம் ஐயா? இந்தக்காலத்தில் எதில் பணம் கிடைக்கிறதோ அதுவே உத்தமத் தொழில். பணம் இல்லாத வேலை வீண் வேலை. ஆகையால் நாம் செய்யும் காரியங்கள் எல்லாவற்றினின்றும் பணம் திரட்டுவதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்துகொண்டே இருக்கவேண்டும். எப்படியென்றால் சொல்லுகிறேன் கேளுங்கள்:

"சாஸ்திரிகளே! ஏகாதசி எப்பொழுது என்று சொல்லுங்கள்" என்றால் பீஸ் "அரையணு."

"தேள் கொட்டிவிட்டது வாத்தியாரே! மருந்து இருக்கிறதா?" என்றால் பீஸ் "ஒரு அணு."

"கத்தரிக்காய் வீசை என்ன விலைக்கு வாங்கினீர்கள் மார்க்கட்டில்" என்றால் பீஸ் "காலணு."

"டைம் எவ்வளவு?" என்றால் "அரையணு."

"ரயில்வே ஸ்டேஷனுக்கு வழி இதுதானு?" என்றால் "ஒரு அணு."

"இன்றைக்கு என்ன விசேஷம்?" என்றால் பீஸ "அரை ரூபாய்."

"இன்றைக்கு மீட்டிங்கு எப்பொழுது?" என்றால் "ஒரு அணு" பீஸ்.

"எல்லாரும் சௌக்கியமா" என்றால் பீஸ் "இரண்டணு."

இந்த மாதிரியாகப் பீஸ் ஏற்பாடு செய்துகொண்டு வாங்கிக்கொள்ளுவது நலம். "பேதிக்கு ஏதாவது மாத்திரை கொடுங்கள் டாக்டர்வாள்!" என்றால், அவர் அந்தஸ்தை அநுசரித்து, அணுவோ, இரண்டணுவோ, நாலணுவோ வாங்கி விடுவதுபோல் நாமும் வாங்கிக்கொள்ளவேணும். இதில் இன்னொரு ரகஸியம் இருக்கிறது. சில புத்திமான்கள் சர்வ சாதாரணமாய் எல்லாருக்கும் தெரிந்த—தெரியவேண்டிய விஷயங்களைக் குறித்துக் கேள்வி கேட்கத் தொடங்குகிறார்கள். அத்தகைய கேள்விகட்குப் பதில் சொல்ல வேண்டி நேர்ந்தால் "பீஸ்" அதிகம் கேட்கவேண்டும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

"ஆனந்தபோதினி" நல்ல அறிவு களஞ்சிமா என்றால் பீஸ் "பத்து ரூபாய்" "கவிராயர்கட்கு உத்தியோகம் ஏன் கிடைப்பதில்லை?" என்றால் பீஸ் "ஐந்து ரூபாய்."

"நீங்கள் சிகரெட் பிடிப்ப துண்டா—பொடிப் போடுவ துண்டா" என்றால் பீஸ் "இருபத்தைந்து ரூபாய்."

ஆனால், சிலருக்கு—தாங்கள் அறிந்துள்ள விஷயங்களை விற்பனை செய்வது என்றால் அதர்மமாகத் தோன்றலாம். இந்தக் காலத்தில் வக்கீல்கள், டாக்டர்கள், உபாத்தியாயர்கள், சங்கீத வித்வான்கள், நாடக நடிகர்கள், சித்திரம் எழுதுவோர் முதலியவர்களெல்லாரும் இந்த வியாபாரம் செய்து கொண்டிருப்பதினால்—இதில் குற்றம் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. தவிர,

நமது காப்பாளர்களாகிய ஆங்கிலேயர்களை நாம் பல வழிகளிலும் பின்பற்றிவருகின்றோம். அவர்கள் பணம் சம்பாதிக்க அநுசரிக்கும் முறைகள் அநேகம். இவ்விஷயத்தில் நாமும் ஏன் அவர்களைப் பின்பற்றக்கூடாது? "யதாராஜா ததா பிரஜா" என்ற பழமொழியுங்கூட நமக்கு ஆதாரவாய் நிற்கின்றதே.

ஓட்டுக் கொடுத்தமைக்காக அந்தஸ்துக்குத் தக்கபடி உப்புமா, இட்லி முதலியவற்றோடு நூற்றுக் கணக்கான ரூபாய்களையும் பெற்றுக்கொள்ளுவது நாட்டு முன்னேற்றத்திற்குரிய காரியம் என்பதை விரிக்கவும் வேண்டுமோ?

இனி, வருவாயைப் பெருக்குவதே அரும் பெரும் நோக்கமாகக்கொண்டுள்ள அரசாங்கத்தாரின் பொக்கிஷம் நிறையும் மார்க்கத்தைச் சற்றே விவரிக்கின்றேன். இத்தகைய பேருதவியை நான் அரசாங்கத்தாருக்குச் செய்வதற்காக—எனக்கு ஒரு ராவ்பகதூர்—திவான்பகதூர் பட்டமாவது தயவுசெய்வார்கள் என்று எதிர்பார்த்துக்கொண்டிருப்பதைப் பேராசை என்று அறிவாளிகள் கருதாதிருப்பார்களாக! ஒருசால் அப்பேர்ப்பட்ட பட்டங்களை இப்பேர்ப்பட்ட சந்தர்ப்பங்களில் கொடுப்பது பொருத்தமல்ல என்று அவர்கட்குத் தோன்றுமானால்—குறைந்தபக்ஷம் ஒரு வெங்கலப் பதக்கமாவது கிருபை செய்வார்கள் என்று எண்ணிக்கொண்டிருக்கின்றேன். பிறகு அவர்கள் சித்தம். எனது பாக்கியம். இனி நான் குறிப்பிடும் மார்க்கங்கள் என்னவென்றால்:

1. நாட்டில் தற்காலத்தில், கவிகள், நாவலாசிரியர்கள், கதையாசிரியர்கள் முதலிய நூலாசிரியர்கள் பலர் இருக்கின்றனர். நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டும் வருகின்றனர். பாடப்புத்தகங்கள் மாத்திரம் எழுதும் கிரந்த கர்த்தாக்களும் ஏராளமாக இருக்கின்றனர். இவர்களுடைய புத்தகங்களை வெளியிடத் தனியாகப் பல கம்பெனிகளும் ஏற்பட்டிருக்கின்றன. இந்தக் கம்பெனிகளிடமிருந்தும் கிரந்தக் கர்த்தர்களிடமிருந்தும் எளிதில் வரி போட்டு வசூல் செய்து விடலாம். இவற்றின் மூலம் பணம் குவிந்து விடும் என்பதில் ஐயம் இல்லை.

2. கள்-சாராயம், அபினி, கஞ்சா முதலிய வஸ்துக்களைத் தயார் செய்தல் விற்றல்கட்கு அரசாங்கத்தார் வரி விதிக்கின்றார்கள். சமூகத்திற்கு இவைகளால் அபகாரம் நேரும் என்றும், வரிகளை விதித்துக் கட்டுத்திட்டம் செய்தால் தொல்லைகள் நீங்கும் என்றும், மக்கள் நலம் பெறுவார்கள் என்றும் அரசாங்கத்தார் எண்ணுவது சரியாகவே இருக்கிறது.

இப்படியே சமூகத்திற்கு உபத்திரவம் உண்டாக்கும் இன்னொரு அம்சத்திலும் அரசாங்கத்தார் கவனம் செலுத்தி வருவாயைப் பெருக்கிக் கொள்ளலாம். நமது நாட்டில் இப்பொழுது, எந்நாட்டிலும் காண முடியாத அளவுக்குப் பிச்சைக்காரர்களின் தொகை நாளுக்குநாள் வளர்ந்து வருகிறது. வீடுதோறும் உரிமை பாராட்டி அலையும் அவ்வவ் வகுப்புக்குரிய பிச்சைக்காரர்களைத் தவிர, ரயில் பிச்சைக்காரர்களும், பஸ் பிச்சைக்காரர்களும், புண்ணிய ஸ்தலப் பிச்சைக்காரர்களும் அநேகம் பேர் இருக்கிறார்கள். இவர்களைத் தவிர, தங்கள் குருட்டுத்தன்மை—செவிட்டுத் தன்மைகளையும் அங்கவீனங்களையும் ஜீவனாதாரமாக வைத்துக் கொண்டிருப்பவர்களும், பரம்பரையாய்ப் பிச்சை எடுப்பதே தொழிலாக உள்ளவர்களும்—பரம்பரைப் பிச்சைக்காரர்கள் உண்டா என்று நேயர்கட்கு ஐயந் தோன்றலாம். அங்ஙனம் ஐயங்கொள்ளும் நேயர்கள் தயவுசெய்து திருமுருகன் படைவீடுகளில் ஒன்றாக விளங்கும் பழனி ஸ்தலத்திற்கு யாத்திரை செய்யவேண்டும் என்று விரும்புகின்றோம். கிரிப் பிராகாரத்திலும், படிகளிலும், அடிவாரத் தெருக்களின் இருமருங்கிலும் குழந்தை—குட்டி—பேரன்—பேத்திகளுடன் சைவப் பிழம்புகளாய்—முற்றத் துறந்த முழு ஞானிகளாய் ஆண்—பெண் மகாத்மாக்கள் வீற்றிருப்பதைக் காணலாம். பிச்சைக்காரத் தெரு என்றே ஒரு வீதி பழனியில் இருக்கிறது. இங்கிருப்பவர்கள் பிச்சைக்குப் போகும் போதுதான் அதற்குரிய வேஷம் போடுவார்கள். அதாவது நல்லகால் முடக் கால்—நல்ல கை முடக் கை நல்ல கண் குருட்டுக் கண்—இவ்வாறெல்லாம் வெகு சமர்த்தாக வேஷம் போட்டுக் கொள்ளுவார்கள்—இவர்கள் வட்டிக்குப் பணம் கொடுப்பதும் உண்டு. தரும வட்டி மூன்று—நான்கு ரூபாய்க்கு அதிகம் இல்லை என்று கேள்வி. சகுனம் சொல்லும் பிச்சைக்காரர்—ஜோஸியப் பிச்சைக்காரர்—சொந்தக் கவியில் ஸ்தோத்திரம் செய்யும் பிச்சைக்காரர்—வசை புராணப் பிச்சைக்காரர்—இப்படி எத்தனையோ பேர் நமது நாட்டில் சஞ்ஜீவனம் செய்துவருகிறார்கள். (தொடரும்.)

---

## பரிசு சம்பந்தமான அறிக்கை.

நேயர்காள்!

நமது 'ஆனந்தபோதினி'யின் 17-வது ஆண்டு சந்தாவைக் குறிப்பிட்ட காலத்துக்குள் அனுப்பிவைக்கும் நேயர்களுக்குப் பரிசுகளும், ஆங்கீரஸ வருஷ பஞ்சாங்கமும் அனுப்பப்படும் என்று தெரிவித்திருந்தபடியே பிரைஸ் வந்தவர்களுக்குப் பிரைஸ்களும், மற்றவர்களுக்குப் பஞ்சாங்கங்களும் அனுப்பப்பட்டுவிட்டன என்று இதன்மூலம் அறிவித்துக் கொள்கிறோம்.

மானேஜர்.

# இந்திரசித்தன் வெந்திறல்

(தோ. மு. பாஸ்கரத் தொண்டைமான், பீ. ஏ.)

“இந்திரன் மூதுகு கண்ட இராவணன்” காதற்றிருமகனாய் இலங்கையில் இந்திரசித்தன் இலங்கினான். புகழ் குன்றாத அரக்கர் குலம் தலையெடுக்கப் பிறந்த அரக்கர்கோனின் அருமந்த புத்திரனாய் அமைந்த இந்திரசித்தனின் இயற்பெயர் மேகநாதன் என்பதாகும். இம்மேகநாதன், வானவர்க்கரசாம் இந்திரன் மேலும் படைகொடு சென்று அவனை வென்று அவனைச் சிறைசெய்யும் ஆற்றல் பெற்றுநின்றான். இந்திரனைச் செயித்த இவன் இந்திரசித்தனாக அமைந்து புகழ் நிறுவிய பான்மையைக் கவியரசர் ஏற்ற இடந்தோறும் போற்றியுரைக்கின்றார்.

இராவண வீரனது நன்மகனாய்ப் பிறந்த இவன், இளவயதிலேயே தனது ஆற்றலைக் காட்டும் இளவீரனாக அமைகின்றான். இவன் அவ்விளவயதில் இயற்றும் விளையாட்டுகளெல்லாம் அசாதாரணமானவையேயாகும். சிங்கக் குட்டிகளைப் பிடித்துவந்து அவைகளுக்குக் கோபமூட்டி, அவைகளுடன் எதிர்த்து விளையாடுதலே இவன்றன் விளையாட்டாக அமையும். இன்னும், வானில் விண் மீனிடையே விளங்கும் அம்புலியை அழைப்பதும், அஞ்சிவந்த அம்புலியை இரண்டு கரத்தாலும் ஏந்தி அதனைத் தாயருக்குக் கொண்டுவந்து காட்டுவதுமே, இந்திரசித்தனது இயல் விளையாட்டுகளாக விளங்குகின. “கலையினால் திங்களென்ன வளர்கின்ற காலத்தே தான், சிலையினால் அரியை வெல்லும் ஆற்றல்” படைத்தவனாய் இலங்கிய பெருமை இந்திரசித்தனுடையதேயாகும்.

“தாளரிச் சதங்கையார்ப்பத் தவழ்கின்ற பருவந்தன்னில்
கோளரி இரண்டுபற்றிக் கொணர்ந்தனை கொணர்ந்து கோபம்
மூளுறப் பொருத்திமாட மூன்றிலின் முறையினோடி
மீளரும் விளையாட்டு”

அயரும் பான்மையைக் கம்பர் அழகாக எடுத்தெடுத்துரைத்து மகிழ்கின்றார்.

“அம்புலி யம்மவாவென் றழைத்தலும் அவிர்வெண்டிங்கள்
இம்பர்வந்தானை யஞ்சலென இருகரத்திலேந்தும்”

இந்திரசித்தனின் வெந்திறல், இளவயதிலேயே விளங்குவதாயிற்று. “விளையும் பயிர் முளையில்” என்பது பழமொழி. இந்திரசித்தன் பின்னர் தானியற்றிய அரிய பெரிய காரியங்களுக்கெல்லாம் அடிப்படை வித்தாக தனது இளவயதிலேயே இகலேறுபோல விளங்கினான் என்பதை கவியரசர் உணர்ந்து கூறும் திறம் கற்றோர் உளத்திற்கு களிபேருவகை தருவதாகும்.

இலங்கை நகரில் புகுந்து, சிறை யெய்திய செல்வியைத் தேடி புழை புகாவாயிலும் புகுந்து வருகின்ற அனுமன்,

"மூக்கணேக்கினன்—மூதன் மகன் அறுவகை மூகனும்
திக்கு நோக்கிய புயங்களும் சிலகாந்தனேயா
ஒக்க நோக்கியர் குழாத்திடை உறங்குகின்ற"

இந்திரசித்தனைக் காணுகின்றான். இவன்றன் கம்பீரமான தோற்றத்தைக் கண்ட அநுமன் அவன் அளவற்ற ஆற்றல் படைத்தவன் என்பதை உணர்ந்தான்.

"வளையும் வாளெயிற்றரக்கனே கணிச்சியான் மகனே
விளையில் வாளரியனையவன் யாவனே அறியேன்
இளையவீரனும், எந்தலும், இருவரும் பலநாள்
உளைய உள்ளபோர் இவனொடும் உளதென உணர்ந்தான்"

என்று கூறும் கம்பர்தங்கவிநலம் போற்றுதற்குரியதாகும். அரக்கர்கோன் அமளியில் தூங்குவதைக் கண்ட அனுமன் அவன்றன் வலியுணர்ந்தவனாய் அவனை அவ்விடத்தே முடித்து, தன்தோளாற்றல் காட்டத்தகும் என்று நினைத்தவன் அவ்வரக்கர்கோன் மகனைக் கண்ட காலத்து மட்டும் அவனது ஆற்றலை யடக்கத் தான் வலியற்றவன் என்பதை உணர்ந்ததோடு, தன் தலைவனாய இராமனும் இளைய வீரனுங்கூட எளிதில் இவனை வெல்லுதல் இயலாது என்பதை உணர்ந்து கூறுவதாக அமைந்துள்ள கம்பர் கவிநலம் நயஞ்சான்றதாகும். இத்தகைய வீரனைத் துணையாவுடைய இப் போரிராவணன் புவன மூன்றையும் வென்றது ஒரு பெருங் காரியமாகப் பாராட்டத் தக்கதன்று என்றும், தனித் தனியேனும் ஒருங்கு சேர்ந்தேனும் மும்மூர்த்திகள் இவனுக்கு உவமையானால் உண்டேயன்றி வேறு உவமை தேடித் திரிதல் வீரன் புகழுக்கு இழுக்கே யாகும் என்றும் கூறும் அனுமனது செஞ்சொற்கள் அழகுடையனவாகவே அமைந்துள்ளன.

"இவனையின்றுணையுடைய போரிராவணன் என்னே!
புவனமூன்றையும் வென்றதோர் பொருளெனப் புகறல்
சிவனை நான்முகத்தொருவனைத் திருநெடுமாலாம்
அவனையல்லவர் நிகர்ப்பவர் என்பதும் அறிவே!"

என்று கவியரசர் அனுமன் வாயிலாகக் கூறும் பெருமை படைத்தவனாக இந்திரசித்தன் விளங்குகின்றான்.

மற்றும் இவ்வீரனது உள்ளம் பலரும் போற்றத்தக்கதொரு சிறந்த உள்ளமாயே அமைந்துள்ளது. சீதையைக் காணவந்ததொரு குரங்கு, அசோக வனத்தையும், அரக்கர் காக்கும் ஓமகுண்டத்தையும் அழித்ததுடன் அமையாது அதனை யடக்கச் சென்ற வீரர் அனைவரையும் வீழ்த்திக் கடைசியாக அரக்கர்கோனின் அருமந்த மைந்தனான அக்ஷய குமாரனது உயிர் குடித்து நின்றது என்று கேட்ட "வீரத்தே நின்ற வீரன்," அனுமன் செருக்கடக்க அசோக வனத்தை நண்ணுகின்றான். தன்னருமைத் தம்பியை இழந்த தமையன் தன் தம்பி மாண்டு மடிந்ததற்காக வருந்தாது அத்தகையதொரு செய

லால் தன் தாதையின் புகழுக்கு நேர்ந்த பெரும்பழியை நினைந்து நினைந்து உருகுகின்றான்.

"தம்பியை உன்னுந்தோறும் தாரைநீர் ததும்புங்கண்ணான்
வம்பியல் சிலையை நோக்கி வாய்மடித்துருத்து நக்கான்
கொம்பியல் மாயாவாழ்க்கைக் குரங்கினால் குரங்கா ஆற்றல்
எம்பியோ தேய்த்தான் எந்தை புகழன்றோ தேய்ந்தது என்றான்"

என்று இந்திரசித்தனது இகலுடை உள்ளத்தைப் போற்றியுரைகின்றார்.

இன்னும்,

"கானிடை அத்தைக்குற்ற குற்றமும் கானூர் பாடும்
யானுடை எம்பிவீழ்ந்த இடுக்கணும் பிறவும் எல்லாம்
மானுடர் இருவரானும வானரம் ஒன்றினானும்
ஆனிடத் தளவென்வீரம் அழகிற்றே யம்மா"

என்று இந்திரசித்தன் தனது வெந்திறல் வலியற்றுப் போனதற்காக வருந்தி தன்னைத்தானே வெறுக்கின்றான்.

வீரஞ் செறிந்த உள்ளத்தில், தானொருவனே ஒப்பற்ற வீரன் என்ற செருக்கும் உறைந்து கிடக்கின்றது. கடத்தற்கரிய காவலையுடைய இலங்கை நகரிலே ஒரு குரங்கு வந்து சிறிதும் அச்சமின்றி, அசோக வனத்தை அழித்ததுடன், தன்னை மெதிர்த்த அரக்க வீரர்களை யெல்லாம் அழித்து நின்றது என்றதை அறிந்த மாத்திரத்தில், அக்குரங்கின் குரங்கா ஆற்றலை அறிந்திருந்தும் அதனை வலியடக்கி வெல்லும் திறமுள்ள தன்னை யேவாது வேறு பல இராக்கத வீரர்களை அனுப்பினது தன் தந்தையான இராவணனது பிழையே யாகும் என்னும் பொருள்பட

"ஒன்று நீ யறிகிலோயோராது உற்றிருந்து உளையகிற்றி
வன்திறல் குரங்கினால்தான் மரபுளி உணர்ந்துமன்னா!
சென்று நீர் பொருதிரென்று திறத்திறஞ் செலுத்தித் தேயக்
கொன்றனை நீயேயன்றோ அரக்கர்தம் குழுவை யெல்லாம்"

என்று இந்திரசித்தன் கூறும் வெம்மொழிகள் அவன் தன் பெருமை யுணர்ந்த தலைமகன் என்பதையும் அவன் செருக்குடன் வாழ்ந்த சிறப்புடையான் என்பதையும் விளக்குவதாகும்.

இன்னும் தன் மற்றொரு தம்பியாய அதிகாயனை இளைய வீரன் வீழ்த்தியதை அறிந்த இந்திரசித்தன், திரும்பவும் தன் தாதை தன்னையே முதலில் போர்க்கு அனுப்பாததற்காக அவனைக் கடிகின்றான்.

"கொன்றாரவரோ. கொலை சூழ்கென நீ தொழுதாய்
வன்றானையர் மானுடர் வன்மை யறிந்து மன்னா!
என்றாலும் எனைச் செலவே வலையிற்ற தென்ன
நின்றான நெடுந்தன்னி முனிந்து நெருப்புயிர்ப்பான்."

என்று கவியரசர் கூறுஞ் செஞ்சொற்கள் தன் தந்தையான இராவணனையே

அவன்றன் முகத்துக் கெதிரே நீ தேர்ந்த ஆலோசனையில்லாதவன் என்று எடுத்துக் கூறும் மேட்டிமை வாய்ந்தவன் மேகநாதன் என்பதை விளக்கும்.

அரக்கர் புரந்தரனும் அகிலலோக பயங்கரனுமான இராவணன் மந்திரா லோசனை கூட்டி, அதில் தனக்கும், தன்னகருக்கும் தன்னையடுத்த அரக்கருக்கும் ஒரு குரங்கால் ஏற்பட்ட பழி துடைக்க எண்ணி ஆலோசிக்கு மளவில் பலர் பல திறங்கூற, வில்லாளரை எண்ணில் விரற்கு முன் நிற்கும் வீரனை இந்திரசித்தன் கூறும் சூளுரை அவன்றன் வீரஞ் செறிந்த உள்ளத்தை இனிதே விளக்குவதாகும்

"முற்றுமுதலா யுலகமூன்று மெதிர் தோன்றிச்
செற்ற முதலோரொடு செறுத்ததோர் திறத்தும்
வெற்றியுனதாக விளையாதொழியின் என்னைப்
பெற்றுமிலையால் நெறிபிறந்துயிலன் என்றான்"

என்று கவிஞர் எடுத்துரைக்கின்றார்.

"யானையிலர், தேர் புரவியாது மிலர், ஏவும்
தானையிலர், நின்றதவ மொன்றுமிலர், தாமோர்
கூனல்முதுகின் சிறுகுரங்கு கொடுவெல்வார்
ஆனவரும் மானுடர் நம்மாண்மை இனிதன்றே.

என்று வில்லாளர் ஆனார்க்கெல்லாம் மேலவனை மேகநாதன், அரக்கர்தம் ஆண்மையை இனிதுணர்ந்து அவ்வாண்மை பயனற்றுக் கிடப்பதற்காகப் பரிந்துகூறுஞ் செஞ்சொற்கள் கற்றார் உளத்தை உருக்குவனவாகும்.

இனி, இராமனுக்கும், இராவணனுக்கும் நேர்ந்த பெரும் போரில் இந்திரசித்தனின் போர்த்திறம் போற்றத்தக்கதொரு பொருளாயே அமைந்துள்ளது.

"பூணெறிந்த குவடனைய தோள்களிரு
புடைபரந்துயர வடல்வலித்
தூணெறிந்தனைய விரல்கள் கோதையொடு
சிலையெறிந்ததொரு தொழில்படச்
சேணெறிந்து நிமிர்திசைகளோடு மலை
செவிடெறிந்துடைய மிடல்வலோன்
நாணெறிந்து முறைமுறை தொடர்ந்து
கடலுலகம் யாவையும் நடுக்கினான்"

என்று இந்திரசித்தனது போர்திறனைப் போற்றிப் புகழ்கின்றார். இந்திரசித்தன் எய்த நாகபாசத்தாலும் பிரமாத்திரத்தாலும் வானரர்படை நலிந்த தன்மையை யாரே மறக்க வல்லார். இலக்குவனுக்கும், இந்திரசித்தனுக்கும் நேர்ந்த பெரும் போர்களிலெல்லாம், வெற்றி தோல்வி யார்பக்கமெனவே விளம்ப இயலாதிருந்தது என்பதும், முன்னர் அனுமன் கூறியபடி, இளைய வீரனும் ஏந்தலும் இருவரும் இவனுடன் பலநாள் பொருது கடைசியிற்றான் இவன்றன் வலியடக்கினார்கள் என்பதுமே இவன்றன் எஞ்சாத வலிக்கு ஒரு

சிறந்த சான்ருகும். இந்திரன் முதுகுகண்ட இராவணன் திருமகஞன, இந்திர சித்தனை இலக்குவன் முடித்தனன் என்பதைத் தேவர்களெல்லாம் அன்றே தாம் அரக்கர் கோனிடமிருந்து சிறை நீங்கியதாக நினைத்து, அவரவர் துசுநீக்கி ஆர்த்துக் கொல்லாத விரதத்தார் தம் கடவுளர் கூட்டமொத்து நின்ருர்கள் என்று கவிஞர் போற்றி யுரைக்கின்ருர். இந்திரசித்தனை யிழந்த இராவணன் இனி வலிகுன்றிய வீரனே யாவன் என்பதையும் அவனை முடிப்பது அருந் திறன் அன்று என்பதையும் வானவர் அறிவர். அந்த நிலையில் இந்திரசித்த னின் வெந்திறல் முடித்த இலக்குவனையே வானவரும் போற்றி மகிழ்கின் ருர்கள். இராமவீரனும், இந்திரசித்தன் பின் இராவணன் ஒருவனும் உளன் என்பதையு மறந்து,

"கம்பமதத்துக் களியானைக் காவற்சனகன் பெற்றெடுத்த
கொம்பு மென்பால் வந்து குறுகினள் நன்றெனக் குளிர்ந்தேன்"

என்று இந்திரசித்தனது வெந்திறலுணர்ந்து அவனை முடித்த தன் தம்பியின் ஆற்றலை வியந்து கூறுகின்ருன். ஆகவே இதுவரை கூறியவற்ருல், இந்திர சித்தன் இகலுடையுள்ளத்தஞய் இலங்கி அதற்கேற்ற வெந்திறலுடைய பெரு மகஞய் அமைந்து அரக்கர்தம் புகழ்நிறுவி நின்றனன் என்பது சொல்லா மலே யமையும்.

# விக்கிரகாராதனை.



('சூரபி' எழுதியது.)

[சென்ற இதழில் வெளியான பாகத்தின் சுருக்கம்:—

## (2) அபிப்பிராய பேதங்கள்

இவ்வியாசம் மத விஷயத்தில் தலையிடவேண்டும் என்னும் நோக்கத்துடன் தொடங்கியதல்ல. எல்லோரும தெளிவான விஷயங்களையும் மறந்து விடுவதால் அவர்களுக்கு அவைகளை ஞாபக மூட்டவே ஆரம்பித்தோம். உலகத்தில் எல்லோருக்கும் ஏற்றதான பொருள் கண்டு பிடிப்பது அரிது. ஒருவருக்குச் சந்தோஷத்தைக் கொடுப்பதே இன்னொருவருக்கு வருத்தத்தை யளிக்கிறது. நன்மை, தீமை; நியாயம் அநியாயம் எல்லாம் நாமே வைத்துக் கொள்வது. நமது யோசனை எவ்விதம் செல்கின்றதோ அவ்விதமே அபிப்பிராயம் மாறுகின்றது. எல்லோரும ஒரே அபிப்பிராயத்தை வகிப்பதில்லை. அதற்குச் சீதோஷ்ணஸ்திதி, சகவாசம், பாரம்பர்யம் முதலிய காரணங்களுண்டு. எல்லோர் கண்களுக்கும் தெளிவாகப்படும் விஷயங்களிலேயே இவ்வித மாறுபாடுகள் தோன்றினால், ஒருவர் கண்ணுக்கும் தெரியாத தெய்விக விஷயத்தில் அபிப்பிராய பேதங்கள் இருப்பது ஆச்சரியமாகுமோ? அதில் ஒன்று தவறு மற்றொன்றுதான் நியாயம் என்று கூறுதல் பொருந்துமோ?]

சென்ற மாதத் தொடர்ச்சி.

## (2) 'மனிதர் இயல்பு'

தெய்வீக விஷயம் என்று கூறும்போதே நமது மனதில் ஒருவித அச்சம் தோன்றுகிறது. எல்லாருக்குமே அது தெளிவாகுமோ? தங்கள் ஆயுள் முழுவதையுமே அதற்காகச் செலவிட்ட மகான்களுக்கும் அதன் உண்மைகள் விளங்கவில்லையென்றால் பாமரஜனங்களாகிய உமக்கும் எனக்கும அறிய இயலுமோ? அன்றியும் தெய்விக விஷயங்கள் லௌகிக விஷயங்களைப்போல அல்ல. காற்றுக்கு இடை (கனம்) உண்டு, காண்டில் (candle) எரியும பொழுது அதன் அளவு குறைவதாகத் தெரிந்தாலும உண்மையில ஒன்றும நஷ்டமாகவில்லை, வைரம் எவ்வளவு பளபளப்புடன் இருந்து எவ்வளவு மதிப்பு பெற்றிருந்தாலும் அதற்கும் நிலக்கரிக்கும் வித்தியாசமில்லை—இவைபோன்ற விஷயங்கள் கண்ணுக்குப் புலப்படாமலிருந்த போதிலும அவை ஒவ்வொன்றையும் தக்க இயந்திரங்களையும் ஆயுதங்களையும் கொண்டு நிரூபித்துக் காட்டலாம். 'தண்ணீர்' என்று சொல்லப்படும் வஸ்து, எல்லோருக்கும இன்றியமையாத வஸ்து, எல்லோரும காணும் வஸ்து, உண்மையில் ஆக்விஜன், ஹைட்ரோஜன் என்னும இரண்டு வாயுக்களினால் ஆயது என்பதை எல்லோரும பரீக்ஷித்து அறியலாம். ஆனால் கடவுள் சம்பந்தமான விஷயங்களை அவ்விதம தெரிந்து கொள்ள முடியுமா?

இவ்விருபதாம் நூற்றாண்டில் வசிக்கும் நமக்கு அநேக விஷயங்கள் எளிதாக்கப்பட்டிருக்கின்றன. எவ்வளவு அரிய விஷயங்கள் கண்டு பிடிக்கப் பட்டு—நமக்கு அடங்கமாட்டா வென்றெண்ணி யிருந்த வஸ்துக்களை எல்லாம் அடக்கி நமது சௌகர்யத்திற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. காற்றென்ன, நெருப்பென்ன, சமுத்திரமென்ன! ஒரு காலத்தில், எல்லாம் மனிதருக்கு எவ்வளவு பயத்தை விளைவித்துக் கொண்டிருந்தன! ஆனால் இப்பொழுது அவ்விதமெல்லாம் இல்லாமல் இங்கிலாந்து செல்வது, அல்லது, அமெரிக்கா செல்வது, ஆகாய விமானத்தில் தபால்களை அனுப்புவது முதலான காரியங்கள் வெகு சகஜமாக நடைபெறுகின்றன. இப்பொழுதும், மின்சாரம் மனிதர்களுக்கு அபாயம் விளைவிக்கிற தென்பதை அறிந்தும், மின்சாரத்தை சமையல் முதல் பிரயாணம் வரை எல்லா வகைகளிலும் உபயோகிக்கிறோம்.

பூமியின் கனம் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது, கண்ணுக்குக் கடுகளவாகத்தோன்றும் நக்ஷத்திரங்களினளவு அறியப்பட்டிருக்கிறது, கண்ணுக் கெட்டாத மனிதனின் மூளை, ஹிருதயம் முதலிய வேலை செய்யும் திறம் காட்டப் பட்டிருக்கிறது, சமுத்திரத்தின் ஆழமும் மலைகளின் உயரமும் தெளிவாக்கப் பட்டிருக்கின்றன......எனினும் மனிதன் எங்கிருந்து உண்டாகிறான், இறந்த பின் எங்கு செல்கிறான், அவன் பாவஞ் செய்தால் என்ன நேரிடுகிறது, புண்ணியத்தின் பலன் என்ன என்றறியப்படவில்லை. இதுதான் உண்மையான தெய்விக விஷயம். இதை பூமி சிருஷ்டியானது முதல் இன்று வரையில் கண்டு பிடித்துச் சொல்பவர் ஒருவரும் அகப்படவில்லை, இனியும் அகப்படுவர் என்று எண்ண இடமில்லை.

சில வருடங்களுக்கு முன் ஒரு பிராமணப்பெண் நோய்வாய்ப்பட்டிருந்தாள். ஜுரம் அதிக வேகமாக அடித்தது. டாக்டர்கள் அவள் பிழைப்ப தரிதென்று கூறி விட்டனர். அப்பெண்ணின் தாயார் ஒருபுறம் புலம்பிக் கொண்டிருந்தனள். இன்னும் 15-நிமிஷம் கழிந்ததும் அவள் உயிர் நீங்கும் என்றறிந்த யாவர்கண்களிலும் நீர்தளும்பின. 3-நாட்களாக வாய்திறவாத பெண் அச்சமயம், "அம்மா, அதோ கருப்பாய் ராக்ஷசனைப்போல் ஒருவன் என்னைக்குத்துகிறானே என்னை 'வா' வென்று கூப்பிட் டழைக்கிறானே" என்று கூச்சலிட்டாள். ஆனால் அவள் இறக்கவில்லை. அப்பொழுது புதிதாக வந்த வைத்தியர் செய்த சிகிச்சையினாலோ, அல்லது அவள் ஆயுள் முடிவடையாததனாலோ, அல்லது அவள் பெற்றோருடைய நல் அதிர்ஷ்டத்தினாலோ அன்று முதல் குணமடைந்து கொண்டே வந்து சீக்கிரம் பூரண சுகமடைந்தாள். ஹிந்துக்களுள் இறக்குந் தருவாயில் இருப்போர் கண்களுக்கு எமதர்மன் தெரிவான் என்று ஒரு நம்பிக்கையுண்டு. மேற்கூறிய உண்மையான சம்பவத்தில் அப்பெண் கூறிய விஷயங்களை என் காதினால் கேட்டேன். அம்மாதிரி சமயத்தில் அவள் விளையாட்டுக்காகவோ, அல்லது வேறு காரணத்திற்காகவோ பொய் கூறுகிறாள் என்பதற்கில்லை. மனிதன் ஸ்மரணையற் றிருக்கும் போது, இனி மரணத்தைத் தவிர வேறு சம்பவம் இல்லை என்றிருக்கும் போது கூறுவது உண்மையாகத்தான் இருக்கும் என்பது சட்டப் பிரமாணம். ஆதலால் 'எமன்' என்று ஒருவன் இருக்கிறான் என்று நாம் யூகித்துக்கொள்வதா!

ஸ்ரீமான். சாது சுந்தர்சிங் என்னும் பெரியாரைப்பற்றி அநேகர் கேள்விப்பட்டிருப்பர். அவருடைய இளவயதில் பகவானிடத்தில் சற்றும் பற்றில்

லாராய் பைபில் (Bible) என்னும் மதப் புத்தகத்தைக் கண்ட இடத்தில் கிழித்து விடுவாராம். ஒருநாள் மனவமைதி கொஞ்சமேனும் இல்லாததால் செய்வதின்னதென்ப தறியாமல் இருப்புப்பாதை நிலைக்குச் சென்று புகை வண்டி வரும் வழியில் படுத்துக்கொண்டு விட்டாராம். இன்னும் ஐந்து நிமிஷத்தில் வேகமான மெயில் அவ்வழி செல்லப்போகின்றது. அப்பொழுது அச் சிறுபிள்ளை சின்னாபின்னமாகவேண்டியதே. அந்நிலையில் அவர் கண்களுக்குப் பளிச்சென்று ஒரு வெளிச்சம் தோன்றிற்று. மறுகணம் இயேசுநாதர் பிரசன்னமாகி, "அன்பனே! ஏன் இவ்விதம் கவலைப்படுகின்றாய். நீ இன்றுமுதல் என்தொண்டில் ஈடுபட்டு ஜனங்கள் மத்தியில் உழைத்துவா" என்று கூறி மறைந்தாராம். இவ்விஷயம் பொய்யென்று எண்ண இடமில்லை. உண்மையாகத்தான் நான் பாவிக்கிறேன். ஆனால் இதிலிருந்து வெளிப்படும் நீதி என்ன? ஹிந்து மதம் பொய் என்றும், கிறிஸ்து மதமே உண்மை என்பதா?

இன்னும் அநேக உதாரணங்கள் கூறுவது பொருத்தமாக விருப்பினும் வாசிப்போர் அலுப்பை உத்தேசித்து இம்மட்டுடன் நிறுத்துகிறேன். மேற்கூறிய இரண்டு விஷயங்களுள் முன்னதும் பின்னதும் முரண்படுகின்றன. ஒன்று உண்மையாயின் இன்னொன்று பொய்யாகவேண்டும். ஆனால் நான் கூறியதிலிருந்து மேற்படி விஷயங்கள் இரண்டும் உண்மை; உண்மையன்றி வேறல்ல. தெய்விக விஷயமானதால் இரண்டும் உண்மையாக விருப்பது ஆச்சரியமன்று. ஹிந்து புராணத்தில் ஆஞ்சநேயரைப்பற்றி ஒருகதை வழங்குகிறது. ஸ்ரீ கிருஷ்ணர் பீமனை யனுப்பி ஆஞ்சநேயரை யழைத்துவரச் சொன்னார். (பீமன் கர்வத்தை யடக்குவதற்காகவே இவ்விதம் செய்ததாகக் கதை கூறுகின்றது.) அவர் கிருஷ்ணன் கூப்பிடுவதாகச் சொன்னதை மதியாமல் 'வரமாட்டேன்' என்று கூறிவிட்டார். மறுமுறை சென்று இராமர் அழைப்பதாகக் கூப்பிடவும் ஆஞ்சநேயர் ஸ்ரீராமர் தொண்டனானதால் ஆனந்தத்துடன் கிளம்பி பீமனையும் தன் தோளின்மேல் வைத்துக்கொண்டு புறப்பட்டார். அவரை வீட்டு வாயிலிலிருத்தி பீமன் ஓடோடியும் உள்சென்று கிருஷ்ணர் காலில் விழுந்து, "ஐயா அந்தப் பலவானிடம் என்னைக் காட்டிக் கொடுக்கவேண்டாம். நான் உமது ஏவலின்படி இராமர் கூப்பிடுவதாக அழைத்து வந்துவிட்டேன். இப்பொழுது என் பொய் வெளிப்பட்டால் என் கதி என்னாகும்" என்று புலம்பினான். கிருஷ்ணர் அவனைத்தேற்றி, "நீ கவலைப்படாதே. அவனை யழைத்துவா" என்றார். பீமன் சற்றும் திருப்தியடையாமல் நடுநடுங்கிக்கொண்டே அவரை அழைத்து வந்தான். ஆனால் ஆச்சரியப்படத்தக்கவிதமாக ஆஞ்சநேயர் கிருஷ்ணனைக் கண்டதும் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, "ராம, ராம" என்று கூறிக்கொண்டே அவரை வலம் வந்தார். ஏன்? அவருடைய கண்களுக்கு அங்குவீற்றிருந்தவர் ஸ்ரீராமனைப்போல் தோன்றினாரன்றி கிருஷ்ணனாகத் தோன்றவில்லை.

தற்கால நாகரிகத்தில் முதிர்ச்சி யடைந்தோரும் அடைய விரும்புவோரும் மேற்படி விஷயம் கட்டுக் கதையே யன்றி வேறல்ல என்பர். அப்படியே இருக்கட்டும். ஆனால் அதன் நீதி எல்லோருக்கும் தெளிவானது. 'கடவுள்' என்று ஒருவர் இருப்பரேல் அவரை முழு பக்தியுடனும் எப்பெயரிட்டு அழைத்தபோதிலும் அவர் பிரசன்னமாவர் என்பதே அதன் கருத்து. 'இயேசு

வில்'' நம்புபவர்களிடம் அப்பெயருடனே விளங்குவர். இராமர், கிருஷ்ணர் ......சிவன், விஷ்ணு என்று நம்புபவர்கள் மத்தியில் அப் பெயருடனே விளங்குகிறார்.

'மனோரஞ்சிதம்' என்னும் புஷ்பத்தைப்பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்களே! அது நினைத்த மணத்தைக் காட்டும் என்பது எல்லோரும் அறிந்தது. அற்ப புஷ்பம் ஒன்றிற்கு இம் மேன்மையான குணம் இருக்குமாயின் சர்வ வல்லமை பெற்றவரும், எல்லாவற்றையும் படைத்தவரும், மனிதனுக்கு யூகிக்கும் குணத்தை யளித்தவருமான கடவுளுக்கு நினைத்த வடிவத்தில் அகக் கண்ணுக்கோ, முகக் கண்ணுக்கோ தோன்றுவது இயலாதா? நல்ல காலமாகக் கடவுளைக் கண்டவர் ஒருவரும் இலர். அப்படி ஒருவர் கண்டிருந்தாலும் அவர் கூற்றை ஒருவரும் நம்பார். ஒரு வீட்டில் பிசாசு இருக்கிறது என்று ஒருவர் பதறி யடித்துக்கொண் டோடுகிறார். ஆனால் அதைப்பாராதவருக்கு அதில் சிறிதும் நம்பிக்கை இல்லை. முன்னவரைப் பார்த்து மற்றவர் கேலி செய்கிறா. அப்படி 'பிசாசை'ப் பார்த்தேன் என்பவருள்ளும் ஒருவர் 'வெள்ளையாக விருந்தது' என்கிறார். இன்னொருவர் 'கருப்பாக விருந்தது' என்கிறார். மூன்றாவதொருவர் '15 அடி உயரம்' என்கிறார். வேறொருவர் 'உயரம் 2 அடிதான். ஆனால் பருமன் 5 அடி' என்கிறார். இதைப்போலவே தான் கடவுள் விஷயமும். 'கடவுள்' என்று நாம் எவ்விதம் நினைத்துக் கொள்கிறோமோ அவ்விதம்தான் நமது மனதுக்குத் தோன்றும்.

புதிதாக ஒரு பெண்ணுக்கு விவாகம் ஆகப் போகிறது என்று வைத்துக் கொள்வோம். அவள் தன் கணவனைப் பார்த்ததில்லை. அவனைப்பற்றி விசாரிப்பதற்கும் வெட்கம். ஆகையால் அவள் மனதிற்குள்ளாகவே ஒரு படம் எழுதிக்கொள்கிறாள். ''பீ. ஏ. படித்தவன் என்கிறார்கள். உயரமாகத்தான் இருப்பான். தலையையும் தற்கால நாகரிகப்படி கிராப் செய்துகொண் டிருப்பான். மாநிறமாகவேனும் இல்லாவிட்டால் நமது தகப்பனார் தேர்ந்தெடுத்திருக்கமாட்டார்......'' என்றவிதமாக அவள் யோசனை செய்கிறாள். பிறகு கணவனை நேரில் பார்க்கும்வரை அவனைப்பற்றி பிரஸ்தாபம் வரும்பொழுதெல்லாம் தான் முதலில் எழுதிய சித்திரத்தின்படியேதான் அவன் உருவம் தோன்றும். அப்பெண்ணுக்குத் தமையன் அல்லது வேறு மனிதர் யாராவது இருப்பரேல் அவர்களும் மாப்பிள்ளையைப் பாராத வரையில் தங்கள் தங்கள் மனதுக்கியைந்தவாறு ஒவ்வொரு சித்திரம் எழுதி அதையே அகக்கண்முன் வைத்துக்கொண்டிருப்பர். இப்படியேதான் நாம் நேரில் காணாத, ஆனாலும் யோசிக்க வேண்டிய ஒவ்வொரு பொருளைப்பற்றியும்.

ஒரு நாவல் படிக்கும்பொழுதும் இப்படித்தான். கதாநாயகன் உருவமும் கதாநாயகி உருவமும் இன்னும மற்றுமுள்ளோர் உருவங்களும் ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு விதமாகத் தோன்றும். ஆயினும் எல்லாம் ஒரே பொருளைக் குறிப்பதால் பாதகமில்லை. ஆதலால் கண்காணாத கடவுளைப்பற்றி நாம் சிந்திக்கும்போதெல்லாம் நம் மனதில் ஒருருவம் தோன்றவேண்டியது அவசியம். நாம் வேண்டுமென்றாலும் வேண்டாம் என்றாலும் அவ்வுருவம் எழாமலிராது. கடவுளைத் துதிக்க வேண்டும்போது நாம் குட்டிச் சுவரிடம் போவோமா? ஒருகாலும் மாட்டோம். நடுத்தெருவில் ஜனநடமாட்டம் ஏகமாகவிருக்கும் சமயத்தில் நாம் கடவுளைத் தொழமுடியாது. தனிமையான இடத்தில், அல்லது எல்லோரும் அதே தொழில் செய்துகொண்டிருக்கும் இடத்தில் கடவு

ளைத் தொழ முடியுமேயன்றி வேறிடத்தில் சாத்தியமில்லை. எதற்காக முடிவ தில்லை? மற்ற இடங்களில் கடவுளின் உருவம் நம்முன் எழுவதில்லை. நாம் கண்ணை மூடிக்கொண்டாலும், "ஏய், ஏய்" என்னும் சப்தமும், "உதையடா அவனை" என்ற ஒலியும், "விடாதே அவனைப் பிடி, பிடி" என்ற அரவமும் நம் நிஷ்டையைக் கலைத்துவிடும்.

நாவல் படிக்கும்போது நம் மனதில் உருவம் எழுகிறது என்றோம். அவ் விதம் எழுவது பிசகு என்று எவரேனும் கூறுவரோ? அல்லது, அவர் கூறினு லும் நமது இயற்கை குணம்போய்விடுமோ? சிற்சில சமயங்களில் புத்தகங்க ளில் சித்திரங்கள் போட்டிருக்கின்றன. நமது "ஆனந்தபோதினி"யிலும் அனேக கதைகளையும் நீதிகளையும் விளக்கப் படங்கள் வருவதை வாசகர் அறி வர். ஒருகால் படிப்போர்க்கு சரியான படங்கள் மனத்தின் முன்பு தோன்று மற்போனால் இப்படங்கள் இருக்கட்டும் என்ற எண்ணந்தான் அதற்குப்பின் இருக்கவேண்டும். அல்லது, ஆசிரியர் மனதிற்குத் தோன்றியவை அவை, மற்றையோர் வேண்டியபடி உருவங்களை அமைத்துக்கொள்ளட்டும் என்பதும் இருக்கலாம்.

கிறிஸ்து மதப் பிரசாரம் நடத்தும் அனேக இடங்களுக்கு நான் சென் றிருக்கிறேன். அனேக இடங்களில படங்களை யெல்லாம் விரித்துக்காட்டி, "இயேசு வனாந்திரத்தில் பிரசாரம் செய்தார்", "யோவான் அங்குகூடியிருந் தவருக்கு ஞான ஸ்நானம் செய்வித்தான்", "இறந்த பையனை இயேசு பிழைப் பித்தார்" என்பதையெல்லாம்பற்றிப் பேசுகின்றனர். இதன் தாத்பரியம் என்ன? ஜனங்கள் மனதில் ஒரு உருவம் எழவேண்டும் என்ற நோக்கமே.

நமது நெருங்கிய உறவினரும் நமது அன்பிற்குரியவருமான ஒருவர் அன் னிய நாடு செல்லும் சமயத்தில் அவரைப் புகைப்படம் பிடித்து நாம் ஒரு காப்பி (Copy) வைத்துக்கொண்டு நமக்கு வேண்டியவர்களுக் கெல்லாம் ஒவ்வொன்று கொடுக்கிறோம். நமது பந்து அருகில் இல்லாதசமயம் அவர் படத்தையாவது பார்த்து அவரைக் கண்டதுபோல் பாவிப்போம். வெகு தூரத்துக் கப்பால் இருக்கும் நமது மன்னா, அல்லது நமது பிரதிநிதி முதலி யோர் ஞாபகார்த்தமாக அவர் படங்களை நமது சுவரில் மாட்டிக்கொள்கி றோம். ஒருகால் பார்க்கக்கூடும் என்றிருக்கும் மனிதர்களை ஞாபகத்தில் வைத்துக் கொள்வதற்காகவே நாம் இவ்வளவு ஜாக்கிரதையுடன் அவருடைய படங்களை வைத்துக் கொள்கிறோம் என்றால் இனிமேல் காணமாட்டோம்' என்பவர்களைப்பற்றி இன்னும நாம் எவ்வளவு ஜாக்கிரதையாக விருக்கவேண் டாம்?

மேற்படியார் படங்களை நாம் வாங்கி வைத்துக்கொள்ளாவிடில் அவர் களை மறந்து விடுவோமா? கிஞ்சிற்றேனும் இல்லை. எப்படி இருந்தபோதி லும் அவர்கள் மனதைவிட் டகலமாட்டார்கள். எனினும் அவர்கள் உரு வம் (படம் ரூபமாக) நமது மத்தியில் இருத்தல் நமக்கு ஒருவித ஆறுதலை யளிக்கின்றது. அதுபோலவே கடவுள் நம் விஷயங்களிலெல்லாம் நமக்கு ஞாபகத்திலிருந்தாலும் அவருடைய உருவம் படம் ரூபமாக நமது மத்தியி லிருத்தல் மிகையாகாது. நம்பிக்கை யுள்ளவர்களுக்கு அது ஒருவிதமான புது ஆறுதலை யளிக்கின்றது.

சென்ற அக்டோபர் மாதம் இரண்டாந்தேதி—மஹாத்மாகாந்தியின் பிறந்ததினம்—அப்பெரியாரின் படம் புஷ்ப மாலைகளால் அலங்கரிக்கப்பட்டுச் சென்னையில் சில தெருக்களில் பாண்டுவாத்தியத்துடன் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டது. அதற்குக் காரணம் என்னவென்றால் ஜனங்கள் அவருக்கு செய்யவேண்டிய மரியாதை அவருடைய படத்துக்குச்செய்து ஒருவித திருப்தி யடைந்தனர். இப்பவும் மேல்நாடுகளிலும் ஜனங்களுக்குப் பிரியத்தைச் செய்ப வர்களுக்கும் ஜனங்கள் நன்மையைக் கோருகிறவர்களுக்கும், மேன்மை மிக்க வருக்கும் உருவச்சிலை செய்யும் வழக்கம் உண்டு. அதிகப பணச்செலவு செய்து கல்லால் அம்மனிதரைப்போன்ற ஒரு உருவம் செய்வதில் பொதுஜனங்களுக் கென்ன சந்தோஷம்? நமது நாட்டிலும், சென்னையிலும் டாக்டர். மில்லர், மிஸ்டர். கோகலே, மிஸ்டர். கிருஷ்ணஸ்வாமி ஐயர்......முதலியவர்கள் உரு வச் சிலை நிறுத்தப்பட்டிருக்கின்றன. சுமார் 10-வருஷங்களுக்குமுன் முத லில் கூறப்பட்டவர் இறந்துவிட்டவுடன் கிரிஸ்டியன் காலேஜ் மாணவர்க ளெல்லோரும் உபாத்தியாயர்களால் நடத்தபபட்டு அச்சிலையி னருகில் சென்று இலையால் செய்த மாலைகளை அச்சிலையின் கழுத்தில் போட்டனர். இவர்கள் அப்பெரியார் இறந்த தினத்தை இவ்விதம் கொண்டாடினார்கள். அவருக்குச் செய்யவேண்டிய மரியாதைகளை அவர் சிலைக்கு செய்தனர். சிலை கையால் செய்யப்பட்டது, கல்லால் செய்யப்பட்டது, இப்புறம் அப்புறம் அசையாதது......அதுவும் ஒருகாலத்தில் உயர்வுபெற்று சுமார் ஆயிரம் ஜனங் களின் மரியாதையைப் பெற்றது!

ஆகவே சிலையை நாம் கௌரவிப்பது அது செய்யப்பட்டிருக்கும் வஸ்து வுக்காகவல்ல, செய்யப்பட்ட விதத்திற்காகவல்ல, செய்த மனிதனுக்காகவல்ல. அது யாரைக் குறிக்கிறதோ அவருக்காக வென்க. இன்றைக்கிருந்து நாளைக்கு மாயும் அற்ப மனிதர்களுக்கே இத்தகைய மரியாதைகள் செய்வது குற்ற மல்லவென்றால் ஜகந்நாதனாகவிருந்து அண்டராசிகள் முழுவதையும் படைத்த எமபெருமானை இவ்விதம் சிலாரூபமாகக் கும்பிடுவது குற்றமாகுமோ? அவ ரைக் கண்டவருமில், அவரைக் காணப்போவாருமில். அப்பேர்ப்பட்டவரை— பூலோக ரக்ஷகரைக் கும்பிடுவதற்கு ஏன் தடை யிருக்கவேண்டும்.

### 3. பூஜிப்பது எது?

ஒருவரை ஞாபகத்தில் வைத்துக்கொள்வதற்கு அனேக முறைகள் இருந்தபோதும் சாதாரண மனிதர்களுக்கு படங்களும், கீர்த்தி மிக்கவர்க ளுக்கு கல்சிலையும் வைத்து நினைவூட்டுவதே மனிதர் இயல்பு என்றோம். அதேபோல சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களில் எல்லாம மேலானதான பக வானைத் தொழுவதற்கும் சிலைகள் ஏற்படுத்துவது குற்றமாகாது என்கிறோம். ஆனல் நாம் கோவிலுக்குச் சென்றால் எதைக் கும்பிடுகிறோம்? அங்கு வைத் திருக்கும் சிலையையா, சிலைமேல் போட்டிருக்கும் பூமாலைகளையா, பூமாலை களால் சிலையை அலங்கரித்த குருக்களையா? இது விஷயம் ஆராய்ந்தாலன்றி விக்கிரக ஆராதனையைப் பழிப்பவருக்குச் சமாதானம் கூறியதாகாது. இவ் வியாசத்தின் சாராம்சம் இவ்விஷயத்தை ஆராய்வதிலேயே யிருக்கிறது.

(தொடரும்.)

# சுகாதாரம்



## இல்வாழ்க்கைக்கு இன்றியமையாதது

(டாக்டர். S. சுந்தரம், L. M. P.)

இல்லுடைத் தலைவன் தலைவியால் இயற்றப்படும் இல்வாழ்க்கைக்கு, இன்பமும், மகிழ்ச்சியும், நலனும், பலனும் அளிக்கக்கூடிய பல பொருள்களில் தலை சிறந்தது ஒத்த உடல்நலம் அல்லது பிணியின்மையே யாகும் என்பதை யாவரும் நன்கறிவார்கள். நோயற்ற வாழ்வே இனிய குடி வாழ்க்கைக்குப் பெருந்துணையும் பெறுதற்கரிய பெரும் பேறுமாகும். கணவ னாவது மனைவியாவது பிணிவாய்ப்பட நேரின் அவ் வில்வாழ்ச்கையின் இன் பம் பல வசதிகள் இருந்தபோதிலும், பெரிதும் பாழ்பட்டுப் போகும் என் பது அனுபவ உணர்ச்சியாகும். தன் கணவனை உலகத்தில் தனக்கு எல்லா மாய்ப் பாவித்து ஒழுகும் மனையாளும், தன் மனைவியை குடிவாழ்க்கை இன்ப நலத்துக்கு ஓர் பெருந்துணையாகக் கொண்ட கணவனும், நோயால் அற்ப காலம் வருந்த நேரிடின், ஒருவர்க்கொருவர் எய்தும் துன்பமும் மனக் கவலை யும் எளிதல்ல.

உடலை நலியச் செய்யும் கொடிய பிணிகளால், மனைவி கணவன், இரு வர்களில் ஒருவர் பல நாள் வருந்த நேரிட்டுவிடின் மற்றவர் படுந்துயரமும் கவலையும் ஒன்றல்ல பல. கணவன் பிணியுறும்பொழுது அவனுக்கு வைத்தி யர் சொற்படி உரிய காலத்தே மருந்து, உணவு முதலியவைகளைத் தயார் செய்து கொடுத்தலும், இன்மென் மொழியால் அவனுக்குத் தேறுதல் ஆறுதல் சொல்லுதலும், படுக்கை உடை முதலியவைகள் வேண்டுவன நல்கலும், மல நீர் உபாதிகளுக்கு உற்ற துணைபுரியலும், பிணியாளனின் உடம்பு நலம் விசா ரிக்க வரும் உறவினர் நண்பர்களுக் கேற்ப உபசாரம் மறுமொழி ஈதலும், தனக்கு ஊண் உறக்கமின்றி மற்றும் வீட்டுக் காரியங்களையும் சரிவர நடத்தி இன்னவையன்ன பிறவும் உடல் நலிய வருந்தியாற்றலும் ஆகிய கடமை உயர் குடிப் பெண்களுக்கு ஏற்பட்டுவிடுகிறது. மனையாள் பாயும் படுக்கையுமா யிருக்க நேரிடின் கணவனது தொழிலும், வரும்படியும் கெட்டு இல்லற இன்பமும் மன மகிழ்ச்சியும் பாழ்படுகின்றன. காலாகாலத்தில் உணவுகிடைக் கிறதில்லை. வீட்டு வேலைகளெல்லாம் பாழ்பட்டுப்போகின்றது. எட்டிப் பார்த்து இரக்கச் சொல் பேசுவாரேயன்றி கிட்டிவந்து உதவி செய்யும் உற்ற துணையும் உறவினருமின்றி உளம் வருந்துவர். அதிலும் பிணி வெகுகாலம் நீடித்திருக்க நேரிட்டால், பெற்ற தாயும், பிள்ளையும்கூட, மலம், மூத்திரம் எடுத்துச் சலித்துவிடுவார்கள். தன்னுடன் இன்ப சுகத்தை அனுபவித்த கணவனும்கூட சலித்து வெறுப்புறுவன். சுருங்கச் சொல்லின் இவ் வாழ்க்கை நடத்தும் கணவன் மனைவி இவர்களுக்குள் எவருக்கேனும் பிணி ஏற்படின்

குடிவாழ்க்கையின் நலனும் பலனும் இன்பமும் மகிழ்ச்சியும் பாழடையுமென் பது வெள்ளிடைமலைபோல் விளங்கும்.

பிணி மூப்புச் சாக்காடு மக்கட்கு இயற்கையாயிருக்கவும் ஒருவர்க் கொருவர் பிணிவாய்ப்பட்டாலாவது மரித்துவிட்டாலாவது அவ்வளவு துன் பமும் மனக்கவலையும் வருத்தமும் அடைவது ஏன்? என்று விசாரித்தால் இந்து சமூகத்தினிடையே காணப்படும் சில கட்டுப்பாடுகளேயாகும். அவை களில் முக்கியமானவை கணவனை யிழந்தவள் மறுமணத் தடையும், விதவை களுக்குக் கொடுக்கப்படும் பல அலங்கோலங்களும் கட்டுப்பாடுகளும், சொத் துரிமையின்மையும் தம்மினத்துக்குள்ளே மணஞ் செய்துகொள்ள வேண்டு மென்றவைகளுமே யாகும். இக்கட்டுப்பாடுகள் ஆதியில் ஏற்படுத்தப்பட்ட தற்கு நோக்கங்களையும், அவைகளின் நன்மை தீமைகளையும், தற்காலங்களில் அவைகளின் அவசியத்தையும் ஆராய்வது நமது கருத்தன்று. உலகத்தில் தனக்கு எல்லாமாயுள்ள தனது கணவனை யிழந்தவளின் கதியும், 35-வது அல்லது 40-வது ஆண்டில், மனைவியை யிழந்து 8 அல்லது 9 வயது விளை யாட்டு மணமாகாத சிறு பெண்ணை மணஞ்செய்து கொள்ளும் கணவனின் இல்வாழ்க்கை இன்பத்தையும் எடுத்துரைப்பது அவசியமன்று.

இத்தகைய கட்டுப்பாடுகளுக்குள்ளும், இக்கட்டுகளுக்குள்ளும் வைத் திருக்கப்படுகிற பெண்களுக்குக் கணவனைத் தேடி மணமுடிக்க விரும்பும் பெற்றோர்களுக்கும், கணவனுக்குப் பெண்ணைத் தேடும் பெற்றோர்களுக்கும், அல்லது தாமாகவே சேரில், மாப்பிள்ளை, பெண்ணையும், பெண் மாப்பிள்ளை யையும் தெரிந்தெடுத்துக் கொள்ள முயற்சிக்கும் காலத்தில், அவர்களுக்கு முக்கியமான ஒரு பொறுப்பு ஏற்பட்டிருக்கிறது. ஒரு கணவனும் மனைவியும் மணஞ் செய்து புதிதாக நடத்தப்படும் இல்வாழ்க்கையின் இன்பத்துக்கும் மகிழ்ச்சிக்கும் பெரும்பாலும் பெற்றோர்களும், ஒரு சிறிது கணவனும் மனைவி யுமே பொறுப்பாளிகளாவார்கள். ஆகையால் அப்பொறுப்பை ஏற்றுக்கொள் ளும் பெற்றோர்களும், கணவனும், மனைவியும் அப்பொறுப்பை நன்குணர்ந்து மணவினைக்கு முற்படவேண்டும்.

அப்பொறுப்புகளில் முக்கியமானவை ஒத்த உடல் நலம் உள்ள வரனையும் மனைவியையும் தெரிந்தெடுத்து மணமுடித்து வைத்தலே யாகும். ஒத்த உடல் நலம் என்றால் உருவத்தில் சிறிது ஏறக்குறைய யிருப் பினும் பெரிதன்று. முக்கியமாக அடியில் குறிக்கப்படும் கொடுமையான வியாதிகளும், பிள்ளைப் பேற்றுக்குத் தடை, அகாலமரணம் முதலியவைகளை விளைவிக்கக்கூடிய சில வியாதிகளும் மாப்பிள்ளைக்கும் பெண்ணுக்கும் இல்லை யென்று உறுதியாய்த் தெரிந்த பின்னரே அவ்விருவர்களுடைய மணத்துக்கு ஏற்பாடு செய்யவேண்டும். ஏனென்றால் அவ்வியாதிகள் உறுதியாய்க் கொல் லுந் தன்மையுடையன. ஆபத்துக் கொஞ்ச காலத்திற்குள்ளிருப்பதைக் குறிக்கக்கூடிய வியாதியின் தன்மை தெரிந்திருந்தும் மணமுடிக்க முற்படு வது, ஆழமான கிணற்றின் விளிம்பில் படுத்துக்கொண்டு பயமில்லை என்று பிதற்றிக்கொள்வதை ஒக்கும். கடவுள் மனிதருக்குப் பகுத்தறிவையும், புத் தியையும் கொடுத்திருக்கிறார். அவைகளை நல்வழியிற் செலுத்தி ஆராய்ந்து கூடிய அளவு நாம் நடந்துகொள்வது நமது அறிவுடையாகுமன்றோ. வாராமற் றடுத்துக்கொள்ளக்கூடிய சில பிணிகளையும், காரியங்களையும், நமது பகுத்தறி

வினாலும், அனுபவத்தினாலும் நாம் தடுத்துக்கொள்ள முடியுமன்றோ. ஆகையினால் ஒவ்வொருவரும் தமது பொறுப்பை யுணர்ந்து முற்படவேண்டும்.

எனது சொற்பமான அனுபவத்திற்குள் சிறு வயதில் கணவனை யிழந்து பரதவிக்கிற ஏழை இளம் பெண்கள் அநேகர்களை நான் பார்க்க நேரிட்டதுண்டு. அவர்களுடைய துக்கமான நிலைமையை அவர்களை யன்றி பெற்ற தாயும் தந்தையும் அறிவார்களோ. 40, அல்லது 45-வது வயதில் மணங்கோரி, 8, அல்லது 9 வயதுடைய ஏழைச் சிறுமிகளை மணமுடித்துக்கொள்ளும் மனிதர்களுடைய குடி வாழ்க்கையை நாம் எவ்வாறு நினைத்துக்கொள்வது.

பெண்ணுக்கு அணிகலமாயுள்ள மானத்தையும், உடலையும், பொருள் கொடுப்போர்களெல்லாம் அவ்வப்போது விற்று உயிர்வாழும் பரத்தையர் வயத்தனாய், பிணியுண்டு, உயிர்க்கருவிகள் கெட்டிருப்பவும அதை பிறரறியாது மறைத்துவைத்து, ஏழைச் சிறு பெண்களை மணஞ்செய்து, குற்றமற்ற அப்பெண்களுக்கும் அவன் வியாதியைக் கொடுத்து இருவரும் பூவுலகில்கண்ட நரகமென்ன இருவரும் வருந்துவதைக் கண்ட எவர்தான் அவர்கள் மடமையை நோக்கி வருந்தார்கள். க்ஷயரோக மென்னும் காச வியாதி (Tuberculosis of the lungs)யை மறைத்துப் பொய்கூறி, ஏழைப் பெற்றோர்களையும், பெண்ணையும், ஏமாற்றித் திருமணஞ் செய்து, இரண்டு மூன்று வருடங்களுக்குள் உயிர்துறந்த பொறுப்பற்ற வாலிபர்கள் எத்தனை? பத்துபபோல் உடல் எங்கும் பரவும் குஷ்ட வியாதியை யறியாது மறைத்துவைத்து ஏழைப் பெண்களை மணஞ்செய்து, அவர்களைப் பரதவிக்கவிட்டு கொஞ்ச காலத்திற்குள் உயிர் துறக்கும் சிறு வயதுடைய மக்கள் எத்தனை? இவைகள் ஒவ்வொன்றையும நான் நேரில் கண்டதையும் எழுதுவதென்றால் அது ஒரு பெருங் கட்டுரையாக முடியும். நான் மிகைபடுத்திக் கூறுவதாகச் சிலர் கருதவும் கூடும். நான் அடையும் பலன் யாதொன்று மிலதால், மிகைபடுத்திக் கூற அவசியமுமன்று.

ஆனல் மாப்பிள்ளையும் பெண்ணும் ஒத்த உடல் நலம் உள்ளவர்கள் என்பதைத் தீர்மானிக்கிறது யார். அப்படித் தீர்மானித்து மணமுடிந்த பின்னர் ஏற்படும் வியாதிகளுக்கென் சொல்வது. இது அனுபவத்திற்குச் சாத்தியமானதா என்ற கேள்விகள் பிறக்கும். ஒத்த உடல்நலம் உள்ளவர்கள் என்று தீர்மானித்து யோக்கியதாபத்திரம் ஈயத் தகுந்தவர்கள் ஆங்கிலேய வைத்தியத்தைக் கற்றுத் தேறியவர்களுக் கன்றி, நாடியைமட்டும் பார்த்துக் குறி சொல்லுவதைப்போல் காசுக்கும், இடத்துக்கும், ஆள் தன்மைக்கும் தக்கவாறு சொல்லும் ஏனைய ஒரு சில வைத்தியர்கள் தக்கவர்களாகார்கள். இது ஓரங்கொண்டு சொல்லுவதன்று. க்ஷயம், இருதய வியாதி, குஷ்டம் ஆகிய இன்னும் பல வியாதிகளைப் பல கருவிகளாலும், பூதக் கண்ணாடியின் உதவியாலும் கண்டறிந்து உறுதியாய்க் கூறத்தக்கவர்கள் அவர்களேயன்றி ஏனையோர்களாகார்கள். எப்படி, லைப் இன்ஷியூரன்ஸுக்குப் பிணியுடைய ஒருவனை பிணியாதொன்றுமில்லை யென்றும் வெகுகாலம் உயிர்வாழத் தகுந்தவனென்றும் பொய்யான யோக்கியதாபத்திரம் கொடுத்தால், எவ்வாறு அக் கம்பெனியானது பெரும் நஷ்டத்திற்கு உள்ளாகுமோ, அதேபோல, ஆளைப்பேணியும் அறிமுகத்துக்காகவும், சொற்ப காசுக்காகவும் கொடுக்கப்படும் பொய்யான

யோக்கியதாபத்திரம் கணவன் மனைவி இவர்களுடைய இன்பவாழ்க்கை இன்பத்தைப் பாதிக்கத்தக்கதாயிருக்கின்றது. ஆகையால் ஆண்களுக்கு ஆடவ ஆங்கில வைத்திய டாக்டரும், பெண்களுக்கு லேடி ஆங்கில வைத்திய டாக்டர்களும் யோக்கியதாபத்திரம் கொடுக்கவேண்டும்.

மணமுடித்துக்கொண்ட பிறகு புத்தி கூர்மை, கல்வியறிவு, உடல் நல்வழி உணர்ச்சி முதலிய குணங்களை உடையவர்கள் அநேகமான வியாதிகளைத் தடுத்துக்கொள்ளலாம். அப்படித் தடுக்கமுடியாத சில பிணிகளுக்கு தான் காரணமல்லவென்றும் நினைத்து அப்பிணிகள் ஏற்பட்டவுழி தகுந்த பரிகாரங்களால் குணப்படுத்திக்கொள்வது மனிதர்கள் கடமை.

மணவினை விரும்பும் மாப்பிள்ளை பெண்ணிடத்தில் பிணியில்லையென்ற யோக்கியதா பத்திரம் வற்புறுத்திக் கேட்பது அவநம்பிக்கைக்கு இடமன்றோ. இது அனுபவ சாத்தியமா என்றால் மணமகனும் மணமகளும் வற்புறுத்த விரும்பினால் எளிதில் நடக்கக்கூடியது. அவரவர்களே அவரவர்கள் பொறுப்பை நன்குணர்ந்தால் எளிதில் நடைபெறக் கூடியது.

ஒவ்வொரு கிராமத்திலும் அந்தந்த கிராம அதிகாரி (Village Magistrate) முன்னிலையில் ஒவ்வொரு திருமணமும் ரிஜிஸ்டர் செய்யப்படவேண்டும்; அப்படிச் செய்யப்படுமுன், மாப்பிள்ளையும் பெண்ணும் கீழ்க் குறிக்கப்பட்டிருக்கிற பிணிகள் யாதொன்றுமில்லாதவர்கள் என்ற யோக்கியதா பத்திரமும் ரிஜிஸ்டர் காலத்தில் கிராமாதிகாரிக்குக் கொடுக்கப்படவேண்டுமென்றும், பேதகமான யோக்கியதா பத்திரம் உடைய திருமணம் தடுக்கப்படவேண்டுமென்று, நமது சட்டசபை மூலமாக சட்டங்கள் பிறப்பதற்கு முன்னும், அதற்காகச் சில தலைவர்கள் அடிகோலுவதற்கு முன்பும், அன்னிய அரசாங்கத்தாராலும், மதம் மதம் என்று நனவிலுங் கனவிலும் மாரடிக்கும் பக்தர்கள் முன்பும் இத்தகைய யோக்கியதா பத்திரமுடைத் திருமணம் ஆதரிக்கப்பெறாமல் போகக்கூடும். ஆனால் தங்களது பொறுப்பையும், இளங் கைம்பெண்களின் நிலைமையும் நன்குணர்ந்த பெற்றோர்களும் வாலிபச் சகோதர சகோதரிகளும் அவரவர்களே மனம் வைத்து ஆதரிக்க நினைத்தால் எவருடைய உதவியுமின்றி எளிதில் நடைபெறுமென்பதற்கு சிறிதும் ஐயமில்லை. நீதியை நினைத்து நடக்க விரும்பும் உத்தமர்களுக்கு வேதவாக்கும் சர்க்கார் சட்டமும் அவசியமன்று.

கணவனை அல்லது மனைவியை நேரில்கண்டு பேசித் தெரிந்தெடுத்துக் கொள்ளும் வழக்கமுடைய சகோதர சகோதரிகளே! நீங்கள் எளிதில் அன்பின் மூலமாய் மேற்படி யோக்கியதா பத்திரத்தை வற்புறுத்திப் பெற்றபின்னரே மணவினைக்கு ஒத்துக்கொள்ளவேண்டும். ஏனைய சகோதர சகோதரிகளே கூடிய அளவு பல வழிகளிலும் மணமகன், மணமகள் பிணியற்றவர்களென்று உறுதியாய்த் தெரிந்தபின்னர் திருமணத்துக்கிசைவது அறிவும் கடமையுமாகும். இதை ஆதியில் அனுசரித்து வந்தார்களென்று தெரிகிறது. அந்த மணமகனுக்கு வழக்கமாய் க்ஷெளரஞ் செய்யும் க்ஷெளரகன் மூலமாய் தெரிந்துகொள்வது உண்டென்று தெரிகிறது. ஆகையால் நமது சகோதர சகோதரிகளினுடைய இல்வாழ்க்கை நலத்தைக் கோரும் ஒவ்வொருவரும் தெரிந்தியற்றுவது கடமையாகும்.

மறுக்கத்தக்க பிணிகள்:—(1) *இருதய வியாதி* (Valvular disease of the heart) (2) *க்ஷய வியாதி* (Tuberculosis of the lung) (3) *இதர காச வியாதிகள்* (Tubercular diarrhœa bone disease etc.) (4) *குஷ்டரோகம்* (Leprosy in its early stage) (5) *காக்கைவலி* (Epilepsy)

பரிகாரம் தேடி தணமான பின் மணத்துக்கு ஒப்புக்கொள்ளத்தக்க முக்கியமான வியாதிகள்:—(1) *க்ரீச்சின வாய்வெனும் குடல் வாய்வு* (Hernia) (2) *விரை வீக்கங்கள்* (Elephantiasis of the scrotum, Hydrocile, other tumours of scrotum) (3) *கிரந்தி* (Syphilis in all its stages) (4) *சீழ் மேகமும் அதைப் பின்பற்றும் பிணிகளும்* (Gonorrhoea & its complications) (5) *சோகை என்னும் கொக்கிப்புழு வியாதி* (Ankylostomiasis)

*சாத்தியம் அசாத்தியமான பிணிகளை வைத்தியர்கள் மூலமாயறிந்து, அப்பிணி, வரன் மனைவி, இவர்களில் எவரிடத்தும் கண்டவழி மணத்துக்கு ஒப்புக்கொள்ளாதிருத்தலே நலம்.*

---




# அருந்தமிழ் ஆற்றல்.

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி. ஏ. பி. எல்.)

பழந் தமிழகத்தின் பரப்பையும் சிறப்பையும் இக்காலத்திற் பல அறிஞர் ஆராய்ந்துவருகின்றனர். வட இமயம் முதல் தென்குமரி வரை ஒரு காலத்தில் தமிழ் மக்களே பரவி இருந்தார்கள் என்றும், ஆரியர் வடநாட்டில் புகுந்தபோது சிந்து நதி பாயும் செவ்விய நாட்டையும் கங்கை பாயும் கழனி நாட்டையும் கைவிட்டு விந்திய மலைக்குத் தென்பாலமைந்த நாடுகளில் தமிழ் மக்கள் செறிந்து வாழத் தலைப்பட்டாரென்றும் ஒரு சாரார் கருதுவர். ஆயினும் வட இந்தியாவிலும் தமிழ்க் கூறுகள் ஆங்காங்கு காணப்படும் என்பது உண்மையாகும். வட புலத்தில் வாழும் மக்களின் உடற் கூறுகளை ஆராய்ந்து அறியப்போந்த ஆங்கில ஆசிரியர்கள் தமிழினத்தைச் சேர்ந்த மக்கள் ஆண்டு பல நாடுகளிலும் காணப்படுகின்றனர் என்று கூறுவர். வங்காள மாகாணத்தில் வாழும் மக்களின் உடற் கூறுகளை உற்று நோக்கிய "டால்டன்" என்னும் மேலை நாட்டு அறிஞர் அம்மாகாணத்தில் வாழும் மக்களில் நூற்றுக்குப் பத்து வீதம் தமிழினத்தைச் சேர்ந்தவர் காணப்படுகின்றனர் என்று கட்டுரைத்துப் போந்தார். இவ்வாறே மத்திய மாகாணங்களிலும் மற்றைய மாகாணங்களிலும் தமிழரை யொத்த உடற் கூறுடையார் வாழ்ந்து வருதலை நடுநிலையில் நின்று ஆராய்ந்த ஆங்கில அறிஞர் நன்கு எடுத்துக் காட்டியுள்ளார். இன்னும் ஆரியத்தின் பாகதங்களாய் வட நாட்டில் வழங்கிவரும் பல மொழிகளிலும் தமிழ்க் கூறுகள் காணப்படுகின்றன வென்று மொழிநூலறிந்தோர் கூறுவர்.

### "ஆழிவாய்ப்பட்ட தமிழ்நாடு"

இங்ஙனம் வடபுலத்தை, விருந்தினராய் வந்த ஆரியர்க்கு விட்டுத் தென்னாட்டில் அமைந்து வாழ்ந்த தமிழ் மக்கள் செம்மைசான்ற நாகரிகம் வாய்ந்து விளங்கினர். வட இந்தியாவில் வழங்கிய ஆரியமொழி, வடமொழி என்றும், தென் இந்தியாவில் வழங்கிய தமிழ் மொழி தென் மொழி என்றும் பெயர் பெற்றன. ஆயினும் அக்காலத்தில் தென்னாடு குமரிமுனையோடு முடிந்து விடாமல் அதற்கப்பாலும் பரவியிருந்த வரலாறு பழந் தமிழ் நூல்களாலும் நன்கு அறியப்படுகின்றது. குமரி முனைக்குத் தென்பாலமைந்திருந்த திருந்திய நாட்டைக் குமரி நாடென்று சிலர் கூறுவர். அந்நாடு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே ஆழிவாய்ப்பட்டு அழிந்ததென்பதில் ஐயமில்லை.

"மூவாச் சாவா மொழி"

இங்ஙனம் கொதித்தெழுந்த 'ஆழியின் கொடுமையால் குறுகி நின்ற தமிழகம் தன்னேரிலாத் தமிழ் மொழியைப் பொன்னேபோற் போற்றி வளர்க்கத் தலைப்பட்டது. முடியுடை மன்னர் மூவரது ஆட்சியிலமைந்த மூன்நாடுகளிலும் தமிழ்மணம் கமழ்வதாயிற்று இயல் இசை நாடகம் என்னும் முத்துறைகளிலும் தமிழ் மொழி சிறந்து வளர்ந்தது. தமிழ்த்தாய் வயிற்றிற் கன்னடமும், தெலுங்கும், மலையாளமும், துளுவமும் பிறந்து வளர்வனவாயின. கொண்ட கருவால் உயிரிழக்கும் நண்டு போலாது பன்மக்களை உயிர்த்த பைந்தமிழ்ப் பாவை இளநலம் குன்றாது இனிது வாழ்ந்தாள். இத்தகைய சீரிளமைத்திறத்தினை வியந்த செந்தமிழ்ப் புலவர் ஒருவர்:

"பல்லுயிரும் பல உலகும்
படைத்து அளித்துத் துடைக்கினும் ஓர்
எல்லையறு பரம்பொருள் முன்
னிருந்தபடி இருப்பதுபோல்
கன்னடமும் களி தெலுங்கும்
கவின் மலையாளமும் துளுவும்
உன்னுதரத் துதித் தெழுந்தே
ஒன்றுபல வாயிடினும்
ஆரியம்போல் உலக வழக்கழிந்து
ஒழிந்து சிதையா உன்
சீரிளமைத் திறம்வியந்து
செயல் மறந்து வாழ்த்துதுமே."

என்று சிறப்பித்துப் போந்த முறை சிந்தையைக் கவர்வதாகும். ஆந்திர நாட்டில் வழங்கும் தெலுங்கு மொழியும், மைசூர் நாட்டில் வழங்கும் கன்னட மொழியும், கேரளநாட்டில் வழங்கும் மலையாள மொழியும் தமிழ்த்தாய் வயிற்றில் பிறந்த மக்களேயாயினும், கதிரொளியைக் கைக் குடையால் மறைக்கக் கருதுவார் போன்று, சிலர் தமிழின் தாய்மையை மறுக்க முற்படுகின்றார்கள். திருந்திய மொழிகளாய கன்னடமும், களி தெலுங்கும், மலையாளமும், துளுவும் தமிழ் மொழியோடு தொடர்புடைய மொழிகளே யன்றித் தமிழ்த்தாய் வயிற்றினின்றும் பிறந்த சேய் மொழிகளல்ல என்று பறை சாற்றுவர் பலர். பிள்ளைகள் வயது மூத்தால் பெற்றோரைப் புறக்கணித்தல் இயல்பன்றோ?

"சேரநாடும் செழுந் தமிழும்"

இனி பிந்திய மகவாய்ப் பிறந்த மலையாளமும் இப்பொழுது தனிமொழி என்று தலை தூக்கி நிற்க முயல்கின்றது. "சிலப்பதிகாரம்" என்னும் செம்மைசான்ற தமிழ்க்காவியம் சேர மன்னனைத் திகழ்ந்த "செங்குட்டுவன்" உடன்பிறந்த "இளங்கோ"வால் இயற்றப்பட்டதாகும். சேர நாட்டில் பிறந்து வளர்ந்து செம்மையுற்ற இக்கவிஞரது தாய்மொழி தமிழ் மொழியே என்பதில் அணுவளவும் ஐயமுண்டோ? சேர நாடாண்ட செங்குட்டுவனைத் தமிழ் வேந்தன் என்றும், சேர நாட்டுச் சேனையைத் தமிழ்ச் சேனை என்றும்

ஆசிரியர் "இளங்கோவடிகள்" புகலும் முறையை நோக்கும் பொழுது அக்காலத்தில் மலையாளநாட்டில் வழங்கிய மொழி தமிழ் மொழியே என்பது மாசற விளங்குவதாகும். வட இமயம் வரை படையெடுத்துச் சென்று பகையரசரை வென்று நட்பரசர் நல்கிய நலங்களைப் பெற்று மீண்ட "கரிகால்வளன்" என்னும் சோழமன்னனைப் பழித்துரைத்த ஆரிய மன்னரது குறும்பையொடுக்குமாறு சீற்றமுற்றெழுந்த சேரன் சேனையைக் குறிக்கப்போந்த இளங்கோவடிகள்,

"காவா நாவிற் கனகனும் விசையனும்
விருந்தின் மன்னர் தம்மொடுங் கூடி
அருந்தமிழ் ஆற்றல் அறிந்திலர் ஆங்கென
சீற்றங் கொண்டு இச் சேனை செல்வது"

என்று கூறும் மாற்றம் கூர்ந்து நோக்கத்தக்கதாகும். அருந்தமிழ் ஆற்றல் அறியாது வளவன் ஆண்மையைப் பழித்துரைத்த குறுநில மன்னரது குறும்பை அடக்குமாறு கொதித்தெழுந்த தமிழ்ச்சேனையின் வீரமும், மானமும், கவிஞர் மொழிகளில் கனிந்து விளங்கக் காணலாம். அருந்தமிழ் ஆற்றல் அறியாது இகழ்ந்துரைத்த அரசர் இருவரும் அல்லலுற்று அழுங்கிய செய்தி சிலப்பதிகாரத்திற் செவ்வையாய் விளக்கப்பட்டுள்ளது.

" மக்களுக் கிடங்கொடுத்த மாதா "

இவ்வாறு தமிழ்த்தாயின் மக்களாய்த் தோன்றிய மொழிகள் தாய்நாட்டைப் பங்கிடத் தலைப்பட்டன. "ஆந்திரம்" என்னும் தெலுங்கு தமிழகத்தின் ஒரு பெரும் பகுதியைக் கவர்ந்தது. கன்னடம் மற்றோர் பகுதியைக் கவர்வதாயிற்று மலையாள நாடு மலையாளமொழிக் குரியதாயிற்று ஆகவே வடபுலத்தை விருந்தாகவந்த ஆரியர்க்கும், தென்புலத்தை திரைத்தெழுந்த கருங்கடற்கும், வழங்கிக் குறுகின்ற தமிழகம் மூன்று கவடாய் முளைத்தெழுந்த மும்மொழிகளால் பின்னும் குறுகுவதாயிற்று. தமிழ்நாட்டின் வட எல்லையாக இன்றுகாறும் நூல்களில் குறிக்கப்படும் வேங்கட மலையைச் சூழ்ந்த நாடுகளிலும இப்பொழுது ஆந்திர மொழியாய தெலுங்கு வழங்கும் தன்மை அறியத்தக்கதாகும்.

" திரைகடலோடிய தேன்மொழி "

இவ்வாறு மக்கள் பல்கி நாட்டைப் பாகம் செய்யக் கருதியபோது கவலையுற்ற தமிழ்த்தாய் கருங்கடல் கடந்து பிறநாடுகளைக் கவர்ந்து பிழைக்கக் கருதினள். ஊக்கம் நிறைந்த தமிழ் மக்கள் காற்றில் இயங்கும் கலங்களைத் துணைகொண்டு கடலிற்சென்று 'கடாரம்' என்னும் பர்மா நாட்டில் குடியேறினர்கள். இலங்கை நன்னாட்டில் இறங்கினார்கள். மலேயா நாட்டில் மன்னி வாழத் தொடங்கினார்கள். இன்னும் ஆப்பிரிக்கா முதலிய அந்நிய நாடுகளிலும் சென்று சேர்ந்தார்கள். 'முயற்சி திருவினையாக்கும்" என்னும் முதுமொழியின் வழி நின்று மெய்வருந்த உழைத்துச் சென்ற நாடுகளை செழிப்புறச் செய்தார்கள். தமிழர் சென்ற இடம் எல்லாம் செழுமை நிலைத்தது; செல்வம் பெருகிற்று; பசியும் பிணியும் நீங்கி வசியும் வளமும் சுரந்தன.

## "முன்னோர் தமிழ்வளர்த்த முறை"

இங்ஙனம் தமிழ்மக்கள் சென்று குடியேறிய நாடுகளிலெல்லாம் தமிழ் மொழி வழங்கத் தலைப்பட்டது. இக்காலத்தில் சிங்களம் சாவகம் கடாரம் முதலிய நாடுகளில் வேளாண்மை என்னும் விழுமிய பணியாற்றியும், தாளாண்மை யென்னும் தகைமையில் தலைநின்றும் தேடிய பொருளின் ஒரு பகுதியைத் தமிழ்மக்கள் தாய்நாட்டிற் கொணர்ந்து பயன்படுத்துகின்றார்கள். இவ்வாறு பல நாடுகளிலும் சென்றேறி வாழும் தமிழரனைவரும் ஒரு குடிப் பிறந்த மக்கள்போல் ஒன்றுபட்டு வாழ்தல் இன்றியமையாததாகும். எங்கெங்கு வாழ்ந்தாலும், எத்தொழிலைச் செய்தாலும், தமிழ்மொழி பேசும் மக்கள் அனைவரும் ஒரு குலத்தவர் என்னும் உணர்ச்சி தலையெடுத் தோங்குதல் வேண்டும். முற்காலத்திய தமிழ் மக்கள் சாதிபேதமென்னும் தடஞ் சுழியிலும், சமயப் பிணக்கமென்னும சண்டமாருதத்திலும் நிலைகுலைந்தழியாது தாய்மொழியைத் தக்கவாறு போற்றி வளர்த்தார்கள். சைவரும வைணவரும், சமணரும் சாக்கியரும், இணக்கமுற்றுத் தமிழ்மொழியை வளர்த்த வரலாறு சங்ககால சரித்திரத்தில் நின்றிலங்குவதாகும். இன்னும் புலனழுக்கற்ற அந்தணனாய் விளங்கிய கபிலனும, கூடலிற் கூலவாணிகம் செய்த சாத்தனும், குணவாயிற் கோட்டத்து அரசு துறந்திருந்த கொற்றவனும், நோய் நாடி மருந் தருத்திய மருத்துவன் தாமோதரனும், தொழில் முறையால் வேறுபட்டவராயினும் வேற்றுமையின்றிக் கலந்து பண்ணார்ந்த தமிழ்மொழியை வளர்த்த பான்மை பழைய வரலாற்றால் அறியப்படும் இன்னும் அறிவு நலம் சான்ற ஆடவரொடு நல்லிசைப்புலமை மெல்லியலாரும் கலந்து நற்றமிழ் மொழியை வளர்ப்பாராயினர். எளிய வாழ்க்கையும் அரிய புலமையும் வாய்ந்த ஔவையாரும், வெள்ளி வீதியாரும், வெண்ணிக் குயத்தியாரும், ஏனைய பெண் மணிகளும் பாடிய அருங் கவிகள் பழந்தொகை நூல்களில் விளங்குகின்றன. ஆகவே மதவேற்றுமைகளாலும் தொழில் வேற்றுமைகளாலும் பால் வேற்றுமைகளாலும் தடையுறாது பண்டைத் தமிழ் மக்கள் தாய் மொழியைப் பாதுகாத்து வளர்த்தார்கள் என்பது இனிது போதரும்.

## "இறந்தகாலத் தாழ்வும் எதிர்கால வாழ்வும்"

ஆயினும் சென்ற சில நூற்றாண்டுகளாகச் செம்மைசான்ற தமிழ்மொழி மாசுற்ற மணிபோல் மயங்கி நிற்கின்றது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் பல காரணங்களால் தாய்மொழி அன்பு குறைந்து பிறமொழிப்பற்று மேம்படுவதாயிற்று. பிறமொழிகளிற் பேசுதலும் எழுதுதலும் அறிவுடைமைக் கழகென்றும், தாய்மொழியிற் பேசவரா தென்று மேடையேறி முழங்குதல் பெருந்தகைமை என்றும் கருதப்பட்டது. கலாசாலைகளில் அருங்கலை கற்கப்போந்த மாணவர்கள் தாய்மொழியைப் புறக்கணிக்கத் தலைப்பட்டார்கள். இத்தகைய அடிமை யுள்ளம் இக்காலத்தில் சிறிது சிறிதாக அகன்றுவருகின்றது. கார்மேகம் செறிந்த வானத்தில் இப்பொழுது கதிரொளி வீசுகின்றது. நாடு நலம்பெற்று ஓங்கவேண்டுமாயின் நாட்டுமொழிகள் தழைக்கவேண்டும் என்னும் உண்மை பல்லோராலும் ஒப்புக்கொள்ளப்படுகின்றது. நாட்டு மொழிகள் நகர சபைகளிலும் நாட்டாண்மைக் கழகங்களிலும கல்லூரிகளிலும் கலாசாலைகளிலும் நின்றேறி நிலவும் காலம் நெருங்கிவருகின்றது. அதற்கேற்ற முறையில் பழையன கழித்துப் புதியன புகுத்தித் தாய்மொழியைச் செப்பம் செய்தல் தமிழ்மக்களது தலையாய கடனாகும்.

# கடற்கரைக் காட்சி.



(தி. வாசுதேவன்.)

---

செங்கதிர்ச் செல்வன் சேர்ந்தனன் மேற்கில்
திங்களும் தோன்றினன் திரைகடல் மீது
மெல்லிய காற்றால் வெம்மை தணிந்தது
நல்லோர் மனம்போல் நவையிலா வானம்.
அமைதி நிலையை அறிவித் தெனக்கு
"இமைகொட்டாமல் எண்ணிலா விண்மீன்
ஒளிரும் காட்சியை உற்றுப்பார்" என—
களிப்புடன் பார்த்தேன் "கவினொடு பொலியும்
இத்தனை வைரமும் எனதே!" என்றேன்
"பித்தன்" என்றெனைப் பேசுவோர் அறியார்
மிளகினும் சிறிதாய் மின்னுமோர் கல்லை
உளமகிழ்வோடு உடலிற்றரிக்க
உலகோர் படுந்துயர் உரைக்குந் தரமோ?
விலையிலாக் கற்கள் விசும்பில் உள்ளன;
கவர்வார் பிறரெனக் கவலல்வேண்டா
எவர்க்குமோர் படித்தாய் இன்பந்தருவன
வெள்ளித்தகடு வேண்டுவோர் நிலவு
துள்ளும் அலைகளிற் றோய்வதைக் காண்க
நுண்மணற் பாயலும் நோய்தீர் காற்றும்
அண்டினோர்க் களிக்கும் அந்தண் கடற்கரை
தாழ்ந்தோர் எனச் சிலர் தமைமுனியாது
ஆழ்ந்த அறிவோர் அடக்கம் உடையர்
என்பதை உணர்ந்தேன் இப்பெருங்கடலால்
சென்னை நகரம் செய்தவம் நன்றே
எத்திசை நோக்கினும் இயற்கை
புத்தி எனக்குப் போதிக்கின்றதே.

# மாதர் உலகம்



## பிராட்டியார்

(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

(850-ம் பக்கத் தொடர்ச்சி.)

இனி பிராட்டியாரின் ஒப்பற்ற ஒளிவடிவச் சிறப்பினையும், பெண்மை நிறைந்த தண்மையையும் புல்லறிவுடையேன் ஆராய்வதற்கும் போதிய ஆற்றல் இன்மை கருதி மேற்செல்லுவதற்கு முயல்கின்றேன்.

கம்பநாடாரின் தீஞ்சுவைக் கவிகளாகிற தெய்வத் தருவினைப்பற்றிப் படர்ந்து மேலேற அவாவுறும் எனதாசைக் கொடி தனது மென்மை வளர்ச்சிக்கேற்பத் தாவ முடியுமன்றி முற்றும் சென்றேற முடியுமோ?

பிராட்டியாரைத் தான் செய்த தவத்தினால் தன்னிடை வதியப்பெற்றதாகிய மிதிலைமா நகரத்தில் இராம லக்ஷ்மணர்கள் விசுவாமித்திர மஹரிஷியைப் பின்பற்றினவர்களாக பிரவேசித்தபோது அந்நகரத்திலுள்ள உந்நதமான மாடமாளிகை கோபுரங்களில் நாட்டப்பட்ட கொடிகளின் அசைவு, தன்னிடத்தில் பூமகள் வசிப்பதனால் அவளைத் திருமண முடிக்க வேண்டிய புருஷ சிரேஷ்டனின் வரவு கண்டு ஆநந்தத்தால் அசைந்தசைந்து விரைவின் வருக வருகவெனத் தன் துகிற்கரங்களை நீட்டி அழைப்பதுபோல் இருந்ததெனக் கவியரசர் முதலிலேயே நல்வரவு கூறிவிட்டார். அதைத் தொடர்ந்தே பிராட்டியாரைக் கன்னிமாடத்தில் முதன்முதலாக விதி வழி கண்ணுற நேர்கின்றது.

இராமனை ஆடவர் பெண்மையை அவாவும் தோளினான் என்று பல இடங்களில் கூறும் கவி அவர்கேற்ற பெண்ணருங்கலனையும் "மங்கையர்க்கினியதோர் மருந்து மாயவள்" என்று தொடக்கத்திலேயே எடுத்துக் காட்டியிருக்கின்றார். வெங்களிவிழிக் கொருவிழாவாக விளங்கும் காந்தியையுடையவள் எனவும், கண்களிற் காணவே களிப்பு நல்கும் கோமளவடிவழகி எனவும் போற்றுகின்றார். மனதைக் கவரும் எழில்கனிந்த தோற்றங்கள் எவர்கள் மனதைத்தான் மகிழ்வுறச் செய்யாது? பெண்களைப் பெண்கள் கண்டாலே மகிழ்ச்சியை எழுப்பும் பேரெழில் உடைய இவளை ஆடவர் திலகனான அரசிளங்குமரன் காண நேர்ந்தபோது ஏற்பட்ட புதிய உணர்ச்சியை எவ்வாறு பிறர் ஊகித்துரைக்க முடியும்? என்பது தோன்ற,

"எங்கணுய கர்க்கினி யாவதாங் கொலோ"

என்றருவியுள்ளார்.

ஓர் யுவதி சவுந்திரியவதியாகக் காணப்பட்ட மாத்திரத்தில் ஓர் யுவன் மனதைச் சிதறவிடலாமோ? அஃது ஒழுங்கு முறையின் பாற்பட்டதாகுமா? என்று வினக்கள் எழலாம். பொதுவிதிக்கு இது பொருத்தமற்றதே. உண்மையில் இது பேதைமையுடைய அறிவிலார், செய்கையே யாகும். ஆனால் நமது கதாநாயகர் எத்தகையவர்? அருந்ததி கணவரிடம் ஞான வைராக்கிய நூல்களைப் பயின்றவர். வேதமாதி கலைகளில் விற்பனர். விதிதவறுதவர். இருபாலினரின் இயற்கையே யுணராத கலைக்கோட்டு முனிவரின் அநுக்கிரகத்தால் உதித்தவர். உத்தம க்ஷத்திரியகுலத்தில் அவதரித்தவர். ஆடவர்க்கும் கற்பு அவசியம் என்னும் சமதர்மத்தை நிலைநாட்டும் நியாயபுத்தி யுடையவர்.

"ஆசலம்புரி ஐம்பொறி வாளியும்
காசலம்பு நகிலவர் கண்ணெனும்
பூசல்அம்பும் நெறியின் புறஞ்செலாக்"

கோசல நாட்டின் அரசுரிமைக் கதிபர் ஆகிய இராமன் மனம் இன்னாரெனவும் அறியாத ஒரு பெண்ணைக் கண்டமாத்திரத்தில் நெகிழ்ச்சியுற்ற தெங்ஙனம்? இத்தகைய உத்தமர்களின் மனமாற்றங்களி னிடமாகத்தான் பழவினையின் தொடர்பினை நாம் நன்கு காணமுடிகின்றது. ஆனால் இவ்விபரீத உணர்ச்சி இராமன்பால் மட்டில் விளைந்திருந்தாலும், அதனை ஒருகால் (தடைவிதிக்கிலக்காக வேண்டிய விதியைப்பெறாத) ஆண்பாலின் இயல்புக்குணம் எனவும் கொள்ள இடமேற்படும். அவ்வாறின்றிப் பெண்மையின் பெரு வாழ்வாகிய பிராட்டியார் மனதில் இன்னான் என்றும் அறியப்படாத ஒரு குமரனைக் கண்டவிடத்திலேயே நிறை தளர்வதியல்போ? சாமானியமான பெண்கள் கூட கன்னிகைப் பருவத்தில் கண்டவர்களையெல்லாம் நாண் துறந்து பெற்றோர் சங்கற்பமின்றிக் காதலிக்க முற்படமாட்டார்களே, அங்ஙனமிருக்க இருவர் நிலையும் வேறுபட்டது விதியின் வன்மையே யன்றி வேறென்னென்பது? தற்காலத்தில் காதல் மணமென ஒரு புதிய ஆவேசம் தலைகாட்டுகின்றது. ஆனால் சரியாகவோ? தவறாகவோ அஞ்ஞான்று சமாசாரப் பத்திரிகைகள் இருந்ததாகத் தெரியவில்லை. இருந்தாலும் உலக அநுபவம் பெறாத இளைஞர் உலக அநுபவம் பெற்றவர்களும் தங்கள் வாழ்வின் நலத்தையே நாடுவதில் கவலையுடையவர்களுமான பெற்றோர் பெரியோர்களின் ஆலோசனையின்றி மணமுடித்துக் கொள்ளலும் நடைபெற்றிருக்கக்கூடிய தென்றும் எண்ண முடியவில்லை. அவ்வக் காலத்திய பழக்க வழக்கங்களே அந்தந்த நாடுகளிலும் இருபாலர்களின் எண்ணங்களை நடத்திச் செல்லும் வழிகாட்டிகளாகுமென்பது மறுக்க முடியாத தொன்றாம். வழக்கில் இல்லாத முறையில் மனம் செல்ல நேருவதும் இயற்கைக்கு மாறுபட்டதே யாகும். சுயம்வரம் என்பதைத் தற்கால நாகரிகர்கள் காதல்மணமென்னும் தலைப்பின்கீழ் உதாரணமாகக் காட்டவும் துணிகின்றனர். இதிலும் தம்மைத் தாமே ஏமாற்றிக் கொள்ளும் வகை வேறில்லை.

சுயம்வரமென்பது அரசகுல மடந்தையர்கட்கே அக்காலத்தில் அங்கீகரிக்கப்பட்டு வந்தது. அம் மங்கைமார்களும் தம்மால் வரிக்கப்படவேண்

டிய அரசரைப்பற்றிய தகுதிகள் அனைத்தையும் முற்கூட்டியே பெற்றோர் வாயிலாகவும் சேடியர் மூலமாகவும் நன்கு விசாரித்துக் கொண்டு மனதில ஒரு முடிவுக்கு வருகின்றனர். வந்த பின்னர் சுயம்வரத்திற்காகக் குறிப்பிட்ட திருநாளில் அரசவையில் குழுமியுள்ள எல்லா மன்னர்களின் பண்புகளையும் தாதியர் உணர்த்தக் கேட்டு இறுதியில் ஏற்கெனவே தமது மனதில் நிச்சயித்த வரனுக்கு மணமாலை சூட்டுகின்றனர்.

சபையில் கன்னிகை வந்தபின் அரசர்குல அறிக்கை படிக்கப்படுவது ஒரு சம்பிரதாயமே தவிர அப்படி எடுத்துரைக்கப்பட்ட அறிக்கையைக் கேட்ட பின்புதான் அவர்கள் தகுதிகளை இவ்வனிதையர் உணர்கின்றார்களென்பதில்லை. பொது அழைப்பின்படி எல்லா அரசர்களும் வந்து கூடிவிடுகின்றனர். எனினும் இன்னாரை வரிப்பதென்கிற தீர்மானம் ஏற்பட்டேயிருக்கிறது. பெற்றோர்பால் ஏனைய அரசர்கட்கு மனவலி ஏற்படாதபடி தடுக்கவே இம்முறை கையாளப்பட்டதாக எண்ண நேருகிறது. ஆதலின் சுயம்வரம் என்பது பொறுப்புணர முடியாத யௌவனுவஸ்தையுடைய இருவர் தனித்து கள்ளத்தனமாகக் காதலிக்கும் காதல் மணத்திற்கு எட்டுணையும் பொருத்தமுடையதன்றாகும். சுயம்வரம் என்னும் பதமே காண்போர்க்கு சுயமாக வரித்தல் எனப் பொருள்படுமாயினும் சுயம் என்பது தன்னைச் சார்ந்த அனைவர்களின் ஆராய்ச்சி அங்கீகாரம் இவற்றின் வழியாகிய உருவாகிய ஓர் திட உணர்ச்சியே யாகும். இதனை வில்லிபுத்தூர் ஆழ்வார் பாரதத்தில் திரௌபதி சுயம்வரத்தில்

"சூட்டிய தொடையல் மாலைத் தோழியர் வைகல்தோறும்
தீட்டிய படங்களும்தம் சிந்தையும் பொலிவு கொள்ளக்
கோட்டிய தனுவினோடும் கொடிமணித் தேரினோடும்
காட்டிய கோலமன்றிப் பிறிதொன்றும் காண்கிலாதாள்"

எனவும்,

"ஆதியிற் குந்திமைந்தர் ஐவர்க்கும் உரியளா மென்
றோதிய விதியினால் நெஞ்சுலப் புறுவுவகை கூர்வாள்
சோதிடம் பொய்யாதென்றும் தோன்றுவர் உரியோர் என்றும்
தாதியர் தேற்றத்தேற்றத் தன்மனத் தளர்வு தீர்வாள்"

எனவும்,

"பூண்திகழ் அலங்கலான் இப்பொன்னவை பொலியத் தோன்றி
ஈண்டெரி முன்னர் மன்னர் இழிவுற வேட்டிலானேல்
மீண்டெரி புகுவன் என்னும் எண்ணமே விளையும்நீராள்"

எனவும் வரும் கவிகளால் ஐயமற விளக்கியுள்ளார். இப் பாஞ்சாலியைத் தனஞ்சயனே மணமுடிக்க வேண்டிய சங்கற்பங்கொண்டே தந்தை தவம் இழைத்துப் பெற்றதும், தனஞ்சயனைத் தவிர மற்றெவராலும் குறிவைத்தெய்ய முடியாத மச்சயந்திரத்தை ஓர் பணயமாக திருஷ்டத்துய்மன் நிறுவியதுமன்றி வேறுண்டோ? இதனால் குடும்பத்தார் யாவராலும் கோரப்பட்டவரனே பாஞ்சாலி மனதிலும் நிலைபெறுகிய உண்மையை யுணர்கின்றோம்.

மச்சயந்திரத்தை எய்து வீழ்த்திய பின்னர் அந்தணர் வடிவத்தோடிருந்த பார்த்தனைச் சமீபித்த அரசகுமாரி

"பூஞ்சாரல் மணிநீலக் கிரிபோல்நின்று பூசுரனை அவன்இவனே
[போலுமென்று
பாஞ்சாலர் பதிகன்னி தனதிருகட் பங்கயத்தாற் பாங்காகப்
[பரிந்துநோக்கி
தேஞ்சாரல் வளர்கழுநீர்ச் செய்யதாமம் செம்மணிகா
[லருவியெனச் சேர்த்தினளே"

எனத் தான் படத்திற்பன்முறையும் கண்டு கண்டு களித்த அடையாளம் உடைய அருச்சுனனே இவனுதல் வேண்டும் எனத் துணிந்த பிறகே மண மாலை சூட்டின நுட்பத்தினையும் தொடர்ந்து குறிப்பிட்டுள்ளார். இதுகாறும் கூறியவாற்ருல் சுயம்வரமென்பது கள்ளத்தனமாக காதலிக்கும் தன்மையி னின்றும் வேறுபட்டதாயும், பகிரங்க நிர்ணயமாகியும் உள்ளதென்பதே பெறப்படுகின்றது.

இனி ஈண்டெடுத்துக்கொண்ட பிராட்டியாரின் திருமணத்தினைத் தொடர்ந்து மேற்செல்வோம். இதில் மேலே காட்டியபடி முற்கூட்டிய திட்டமான முடிவு இருந்ததில்லை.

எனினும் பிராட்டியாரின் ஒப்புவமையற்ற பேரழகினுல் மதிமயங்கிப் பித் தேறிய அரசர்களின் ஓயாப்போரினின்றும் விடுதலைபெறும் உபாயமாகவே சிவ ஞரின் வில்லை முறிப்பவருக்கே பெண்ணைத் தருவதென்கிற ஒரு பணையத்தை ஜனகர் ஏற்படுத்தினுரென்பது தெளிவாகின்றது. புராரியின் தநுவினைப் புராரிக்கிணையாகிய ஒருவர் முறிக்கக்கூடுமல்லது ஏனையோரால் இயைவதன் றென்பதை ஞானியர் போற்றும் ஞானியாகிய ஜனகர் நன்குணர்ந்தவர். பிராட்டியார் திருமகளின் அவதாரமென்பதையும் அவர் தமது பேரறிவால் உணர்ந்தவரே. அதுபற்றியே,

அரசசபையில் இராமனைக்கண்ட மாத்திரத்தில் அவரது அந்தரங்க ஆன்மா இவரே பிராட்டியாரைக் கைப்பிடிக்கத் தோன்றிய புருஷோத்தமன் என்றும் நன்கு உணர்த்தியது. உண்மை ஞானியாகிய சுகப்பிர்மத்திற்கும் ஞாஞசாரியராக விளங்கிய ஜனகருக்கு இந்நுட்பம் தெரியக் கூடாததா? யோகியர் உள்ளத்தில் உறைந்து அமுத மூற்றும் பரமான்மாவை அந்த யோகி அறிவதில் என்ன தடையுளதாகும?

சைவ சமயாசாரியரில் ஒருவராகிய சுந்தரமூர்த்தி நாயனுர் திருப்போ ரூரில் ஆலயத்தில் எம்பெருமான் இல்லை யெனபதை உணர்ந்து பள்ளர்க ளோடு பள்ளராகி வயலில் களைகட்டுத்தொழில் புரிந்த ஆதியைகண் டுணர்ந்து அசதியாடிஞரெனும் சரிதவரலாற்றினுல் பக்தர்களே ஈசன் திரு விளையாடலை உணர்தல் கூடுமென்று உணாகிஞரும். இது பற்றியே "பக்தி வலையிற் படுவோன்காண்" என்றருளி யுள்ளார்கள்.

பக்தர்கள் தன்மைக்கே வெளிவரும் பரமன் அகண்டமான ஞானியர் களின் உணர்விற்கு அப்பாற்பட்டவ ராவரோ? இக்குறிப்பினை.

"மாற்றம் யாதுரைப்பது மாயவிற்கு நான்
தோற்றவாறெண மனம் துளங்குகின்றதால்

நோற்றனள் நங்கையும் நொய்தின் ஐயன்வில்
ஏற்றுமேல் இடர்க்கடல் ஏற்று மென்றனன்''

என்னும் ஜனகர் வாக்கினால் கவியரசர் உணர்த்துகின்றார். இச்செய்யுளின் முன்னிரண்டடிகளால், எண்ணவும் உரியவர்களல்லாத பிற அரசர்களால் விளையும் தீராக் கலகத்திற்கு ஒரு தடைகல்லாகச் சிவதநுவினை ஒரு பணையம் கூறினேம். அரசர்குலமும் ஏமாற்ற மடைந்து திசையையும் நோக்கித் திரும்பா தொழிந்தது. மலர்மகள் கேள்வனே இன்று வந்து விட்டபடியால் அவர்க்குரிய மங்கையை வணங்கி யளித்து மகிழ்வதற்கு இடையூறாக நான் ஏற்படுத்திய பழைய சபதம் தடுக்கின்றதே, ஆகவே அந்த வில்லால் முடிவில் யானே தோல்வியை யடைந்ததாக மனம் தத்தளிக்கின்றது.

தவிர வஞ்சனையாற் பிறரைத் தோல்வியுறச் செய்பவர் எவரும் தாமும் அதே காரணததால் ஒரு காலத்தில் ஏமாற்றப்படுவது நிச்சயம் என்னும் விசேடக்கருத்தும் துணியப்படுகின்றது. சொத்திற் குடையவர் வரும் காலத்தில் சோதனைக் குட்படுத்தி அதன் பிறகு அவர் தம் உடைமையை ஈவதும் ஒழுங்கோ ?

ஜனகன் வாய்மை தவறி வில்லைவளைக்காத ஓர் அரசகுமாரனுக்கு மணம் புரிவித்தான் என வரும் பழிக்கும் அஞ்சுகின்றமை "நொய்தின் ஐயன்வில் ஏற்றுமேல் என்னையும் இடாக்கடல் ஏற்றும் என்றனன்'' என்று பின்வரும் அடிகளால் இனிது தெளிவாகின்றது.

உலகத்தோ டொட்ப வொழுகாதான் மன்ற பலகற்றும் கல்லாதவன் எனும் கருத்து ஈண்டு சிந்திக்கத் தக்க தொன்றாம். யான் தவறுதலாக வில்லை முறிப்பவருக்கே விளங்கிழை உரியவள் எனும் ஓர் நிபந்தனையை அன்று ஏற்படுத்தி யிருநதாலும் "நங்கையும் நோற்றனள்'' திருமாதும் தனது நாயகனை யடையும் பொருட்டுத் தவம் புரிந்து நிற்பவளாதலின் அவள் நோன்பின் பயனாக இக்குமரன் (லேசாக) வருத்த முறாமல் வில்லை நாணேற்றுவானேல் என்னையும் இடர்க்கடலினின்றும் கரையேற்றியதாகும் என இரங்கித் தனது நிலையை யுணர்த்துகின்றார்.

நங்கை தனது பதியை யடையச் செய்த நோன்பின் பயனாக இப் பணியை ஏற்க ஐயன் இசைதல் கூடும். அதனால் நானும் துயர்க்கடலிலிருந்தும் மீண்டவனாவேன் என்று இருவகையிலும ஏற்படும் பயனை விளக்குகின்றார். தீனதயாபரனாதலின் தன்னை இப்பெரிய பொறுப்பினின்று விடுவிக்கும் பொருட்டாவது சபதத்தை முடிக்க வேண்டுமென நயம்பட வேண்டுகின்றார். தாடகை வதம் புரிந்து தனது குலகுருவாகிய சதாநந்தனையீன்ற அன்னை யாகிய அகலிகையின் சாப விமோசனம் செய்தருளிய இவர்க்கு இவ்வில்லை வளைப்பது அற்பகாரியமேயன்றி அசாத்தியமான தன்று. எனினும் இதைச் செய்தால்தான் உமக்குரிய தேவியை நீர் பெறலாம் என யான் துணிந்து கூறுவதெப்படி? எனத் தன்னுள் எழுந்த இடர்ப்பாட்டை அச்செய்யுளால் விளக்குகின்றார். இதனால் பிராட்டியாரின் மனமும் தவறாய வழியில் நெகிழ்ச்சி யுறவில்லை. இராமன் கருத்தும் குறிதவறிப் பாயவில்லை. பிராட்டியாரின் ஞானத்தந்தையும் இவ்விருவர்களின் உரிமையினை உணரத் தவறி விடவில்லை. பழவினை தொடர்ந்து பற்றும் என்பதையே இவ்வுதாரணம் வலியுறுத்துகின்றது. அன்றியும் ஆபரணங்களும் மெல்லிய பூம்பட்

டாடைகளும் தொன்று தொட்டே அதாவது (பிராட்டியார் அவதரிப்பதற்கு முன்னிருந்தே) எழிலுடைய மடந்தைமார்களிடம் பழகிவரும் பேற்றினை யுடையவைகளே. பெண்கள் தம்மைப் பின்னும் இயற்கையால் அழகு படுத்திக்கொள்ளவே இவைகளை அணிய விழைகின்றனர். ஆனால் பிராட்டியார் அவதரித்த பின் அவ்வணிகளும் துகில்களும் பிராட்டியாரின் ஒளிவடிவினை யடைந்து இது வரையில் தாம் பெற்றிராத ஓர் புதிய அழகினைப் பெற்றுச் சிறந்தனவென்று கூறும் நுட்பத்தை எழுத்தினால் எடுத்துக்காட்ட முடியுமோ? பிறரை அழகு செய்யவல்ல பொருள்கள் பிராட்டியாரை அடைந்தமையால் தாமே அதிக அழகைப் பெற்றனவென இடங்கண்டு அமையாவன்பினால் போற்றுகின்றார். இனி,

"எண்ணரு நலத்தினாள் இனைய நின்றுழி
கண்ணொடு கண்ணிணை கௌவி ஒன்றையொன்
றுண்ணவும் நிலைபெறா துணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்"

என்ற அடுத்த கவியில் திருக்குறளாசிரியர் "கண்ணொடு கண்ணினை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள் என்ன பயனு மில" என்றமைத்த அமைப்பினையே வடித்துக் கூறுகின்றனர் என்பது உண்மையே ஆயினும் கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் என்ற குறட்பாவின் அடியைவிட ஈண்டு கண்ணொடு கண்ணிணை கௌவி என்று கவிச்சக்கிரவர்த்தி கூறியது அதற்கு மூகப்பு இழைத்ததுபோலாகும். அவ்விடத்தில கௌவி என்று அமைத்தருளிய அழகினை எவ்வாறு போற்றுவது? அழகெனும் அதுவுமோர் அழகு பெற்றதெனக் கூறியதற்கொப்ப கவியரசரின் இசைசுவைக் கவிகளாக இராமகதை அமையப் பெற்றதினால் தமிழ்மொழி யின்பமே, தானொரு புதிய இன்பத்தினை யடைந்ததென் றுரைத்தலே பொருந்தும். கௌவப்படுவதெல்லாம் உண்ணுதற் பொருட்டே யாகும். ஈண்டு பரஸ்பரம் கௌவப்பட்ட கண்ணிணைகள் அவைகளை யுட்செலுத்த முடியவில்லை என்று விளக்குகின்றார்.

என்னே! ஓர் இந்திரியத்தின் தொழிலை மற்றோர் இந்திரியம் புரியுமோ? ஆகவே கௌவிய கண்ணிணைகள் உண்ண முடியாதவைகளாயின. கௌவியதன் பயன்தான் என்னை எனில், உணர்வு இருவரிடையும் ஒன்று பட்டமைதான் என்றருளி யுள்ளார்.

இந்த நிலையிலும் அண்ணலும் நோக்கினான் என முற்பட இராமனை பாலின் தன்மைக் கியல்பாக நோக்கிய பின்னரே, அவளும் நோக்கினாள் எனப் பெண்மை யியல்பு வெளிப்படப் பெய்துள்ளார். எண்ணத்தின் நெகிழ்ச்சி ஒரு தன்மைத்தேயாயினும் அதனை வெளிப்படுத்தும் விடய முயற்சியில் ஒரு போதும் உத்தமப் பெண்களின் இயல்பு முன்னதாக ஈடுபடாதென்பதுறுதி. ஆண் இனத்திலும் பெண் தன்மையுடைய ஒரு சிலர் இருக்கின்றனர். அவ்வாறே பெண்பாலாரிலும் ஆண் தன்மையினையுடைய சிலர் இருத்தல் காண்கின்றோம். அவரவர் பாலிற்கு ஒவ்வாத இந்நிலை நல்லோரால் வெறுக்கத்தக்கதொன் றென்பதில் ஐயமில்லை. இம்மாதிரி இடங்களில்தான் பேதமை யென்பது மாதர்க்கு (அலங்கரிக்கும்) அணிகலம் என ஔவையார் அருளியதன் கருத்துநயம் தருகின்றது. தமதெண்ணத்தினை அடக்கிப் புறங் காட்டாது ஆளும் திறம் பெண்களுக்கே யுண்டு. இத்திறமை யமையாதவ

ராகிய ஆண்பாலார் இக்காரணம்பற்றி இவரை அறியாதவா பேதையர் என்று கூறுகின்றனர். அவ்வாறு அவர்களால் எண்ணப்படுவது இவர்கட்குச் சிறப்பாக முடிவ தல்லது இழிவன் றென்பதே மூதாட்டியாரின் கருத்தாகும்.

அறிஞரை உணர முடியாதவர்கள் அறிவிலார் எனக் கூறுவதால் அறிஞருக் கிழுக்குண்டோ? தமது அடக்க வுணர்ச்சியின் அளவினைக்காணாத பிறர் தம்மியல்புக் கேற்ப எவ்வாறெண்ணினும், பெண்மைக்குச் சிறப்பாக முடிகின்றதென்னும் நுட்பம் வெளிப்படுவதோடு, அத்தகைய அடக்க வுணர்ச்சியை இன்றியமையாத தருணம் நேருங்கால் கையாளாமல் தமதறிவுடைமையை வெளிப்படுத்தும் இயல்பும் பெண்களிடை யுண்டென்பது தோன்றவே அவயவம் என்று அமைக்காமல் அணிகலம் என்றருளி யுள்ளார்.

கண்ணொடு கண்ணிணை கௌவி உணர்வும் ஒன்றுபட்ட இவ்விருவரினும் பெண்மைக் கியல்பாய அடக்க வுணர்ச்சி தோன்ற அண்ணல் நோக்கத் துணிந்த பின்னரே பிராட்டியாரும் நோக்கியதாகக் கவி விழிப்புடன் அமைத்துள்ளார்.

---

## "செந்தமிழ் வளர்ச்சி."




ஆங்கில கலாசாலையில் தமிழ்ப்பண்டிதர் வகுப்பு! மாணவர்கள் தமிழில் எவ்வளவு சிரத்தை காட்டுகின்றனர் பாருங்கள்.

---






# இங்கிலாந்தில் டேனர் ஆட்சி—கன்யூட் கதை.



(டி. எஸ். ராஜகோபாலன், பி.ஏ., எல்.டி.)

அழியரசன் எதெல்ரெட் காலத்தில் அரும்பாடுபட்ட ஆங்கிலோ சாக்ஸனியர் கான்யூட் காலத்தில் சமாதானமாகவும் சந்தோஷமாகவும் வாழ நேர்ந்ததும் அவர்களுடைய நற்காலமே. எனினும், டேனர்கள் உள்பட நார்த்மென் என்ற வடக்கத்தியர், ஆங்கிலோ சாக்ஸனியருடைய அயலார்களே. ஏறத்தாழ ஒரே பழக்க வழக்கங்கள்—ஒரே பாஷை, ஒரே நாகரிகம், ஒரே தொழில், ஒரே தன்மை. சிறியதான மதவேறுபாடு மட்டும் இருந்தது. அதுவும் ஆல்ப்ரெட் செய்த நற்காரியமான மதமாறுதல் என்ற நிபந்தனையினால் ஒன்றாகிவிட்டது.

எட்மண்ட் இறந்த பிறகு இங்கிலாந்து பூராவுக்குமே கான்யூட் அரசராகி விட்டார். பணிந்து நடந்த வரையில் அவர்களை ஹிம்சிப்பதில்லை என்பதையும், தனக்கும் ஆங்கிலோ சாக்ஸனியரிடம் நம்பிக்கையுண்டு என்பதையும் காட்ட விரும்பி, தனக்கு ஆத்மார்த்தமான அந்தரங்க மெய்க் காவலாளர்களைத் தவிர, எஞ்சியிருந்த பூரா டேனர் வீரர்களையும் தாய்நாட்டிற்கு அனுப்பி விட்டு, ஆங்கிலோ சாக்ஸனிய வீரர்களையும், ஆங்கிலோ சாக்ஸனிய மாலுமிகளையுமே தேசப் பாதுகாப்பிற்கு நியமித்துக் கொண்டார். இறந்த எதெல்ரெட் அரசனுடைய மனைவியான எம்மா (Emma) என்ற நார்மனிய ராணியையே மணந்து கொண்டார். நாட்டைப் பல பெரிய பாகங்களாகப் பிரித்து அவைகளுக்கு ராஜப்ரதிநிதிகளாக ஆங்கிலோ சாக்ஸனிய பிரபுக்களையே நியமித்தார். ஆல்ப்ரெட்டைப்போல குடிகளின் நன்மையை நாடியே பல காரியங்களையும் நடத்தினார். ஆகவே ஆங்கிலேயர் வருத்தப்படக் கூடிய விஷயங்கள் ஒன்றுமே சம்பவிக்கவில்லை.

இந்த “நல்ல கன்யூட்”டுக்கு முகமன்கூறி இச்சகம் பேசுகிறவர்களிடம் இருந்த வெறுப்பைக் குறிக்கும் ஒரு விநோத சம்பவம் ஆங்கில கவிகளில் குறிக்கப்படும். அதாவது:—கன்யூட்டின் பெருமைகளை ஓரேயடியாய் புகழ்ந்து வந்தனர் சிலர். அவர்கள், “ஜனங்களே யன்றி, மிருகங்களும், இயற்கைப் பொருள்களான, கடல், காற்று மேகம் முதலியனவும் ராஜாஞ்கினைக்குப் பணிந்து கிடக்கின்றன” என்று புகழ்ந்தார்களாம். இவர்களுக்குப் புத்தி புகட்ட எண்ணிய அரசர் கடற்கரையில் உலாவிக் கொணடிருக்கையில் ஒரு நாள் ஒரு சேவகனைக் கொண்டு ஒரு நாற்காலியை அலைகள் நன்றாய் எறி

மோதும் இடத்தில் போடச்செய்து அதில் உட்கார்ந்துகொண்டு கடலைச் சற்று நேரம் உற்று நோக்கிய வண்ணமாயிருந்தார். அலைகள் நன்றாய் அடித்துக்கொண்டிருந்து இவருடைய கால் ஆடையைப் பூராவும் நனைத்துவிட்டன.

அரசன் எழுந்து நின்றுகொண்டு "ஓ சமுத்திரமே நான் உன் அரசன் என்பதை மறந்தாயா? நீ பணிவு கொஞ்சமும் இன்றி என்னை மதியாது உடைகளை நனைக்கிறாயே! தூரப்போ! இல்லாவிட்டால் என்ன செய்வேன் தெரியுமா?" என்று உரக்கக் கத்தினார். கூட இருந்த முகமன் பிரபுக்கள் அரசனுக்குப் பித்தம் தலைக்கேறியதோ என ஐயுற்றுப் பின்வாங்கினர். அவர்களுடைய விகாரமுகத்தைக் கண்ட அரசன் அவர்களை நோக்கி "ஓ புத்திசாலிகளே! பார்த்தீர்களா! என் வன்மை யெவ்வள வென்பதை? நீங்கள் சொல்லுவதெல்லாம் இச்சகம்! காற்றையும் கடலையும் அடக்கியாளும் சக்தி எல்லாம் வல்ல இறைவனுக்கே உண்டு! என்னைப் புகழ்வதைவிட்டு அவனை ஸ்தோத்தரியுங்கள்!" என்று இடித்துரைத்துப் புத்தி கற்பித்தார். இத்தகைய மன்னன், "அடக்குவதில்லை, அளித்தலே சீர்மை, கொடுக்கும் அமைதி எதிர்கொண்டு," "அச்சத்தைவிட்டு அன்புமதம் பூண் அரசிற்கு, எச்சமயத்தாரே பகல்," "வாய்மூடிக் கைகட்டி, வஞ்சமுடனைரசை, நோய் பலவே வாட்டும் நுழைந்து" என்ற உண்மைகளை அறநூலில் விதித்த பிரகாரம் ஆண்டு "நல்ல கன்யூட் (Canute the Good) என்ற பெயரும் பெற்றார்!

கன்யூட் இறந்ததும் அவருக்கு எம்மாவிடம் பிறந்த ஹெரால்ட் ஹேர்பூட் (Harold Harefoot) ஹார்டி கன்யூட் (Hardi Canute) என்ற இருவர் சொல்ப சொல்ப காலம் இருந்து ஆண்டு இறந்தனர். கன்யூட் சந்ததியற்றுப் போகவே, எம்மாவுக்கும் பழைய எதெல்ரெட்டுக்கும் பிறந்த எட்வர்ட் என்றதொரு பிள்ளை நார்மண்டியில் பாட்டன் வீட்டில் வளர்ந்து கொண்டிருந்தது. அந்த எட்வர்டுக்கு இங்கிலாந்தில் வெஸ்ஸெக்ஸ் மாகாணப் பிரதிநிதியாக இருந்த ஆங்கிலோ சாக்ஸனிய பிரபுவும் அதிக செல்வாக்குள்ளவருமான காட்வின் பிரபுவின் மகளைக் கல்யாணம் செய்வித்து அந்த எட்வர்ட் இங்கிலாந்துக்கு அரசராக்கப்பட்டார்.

இவர் சதா காலமும் தெய்வபக்தி செய்யக்கூடியவராதலால் இவருக்கு "தெய்வபக்தியுள்ள எட்வர்ட்" என்று பொருள்படக்கூடிய ('Edward the Confessor') என்றபெயர் சரித்திரத்தில் வழங்கும். பால்யத்தில் ஆதரிப்பாரின்றி பிறர் கையைப் பார்த்து வளர்ந்தவராதலால் ராஜீய விவகாரங்கள் அதிகமுணர்ந்தவரல்லர். ஆனால் தான் ராஜாவாகவந்த காலத்தில் தன் பால்ய சிநேகிதர்களான பல நார்மனியரை உடனழைத்து வந்து அவர்களை நல்ல பதவிகளில் வைத்தார். அரசன் சலுகையுள்ள இந்த நார்மனியர் "சர்க்கார் கோழி முட்டைகளாக, வரம்புமீறி ஜனங்களைத் துன்புறுத்தலாயினர் அதைக் கண்ட விட்டன் என்ற பெரியோர் சபையினர், காட்வின் பிரபுவின் மேல் பார்வையிலும் தூண்டுதலிலும், காட்வினுடைய மகன் ஹாரால்ட் (Harold) ஐ நிர்வாகியாக்கி, அரசனை பேருக்கு மட்டும் வைத்து ஆதரித்து வந்தார்கள்.

இந்தமாதிரியான ஒரு சமயத்தில், அரசனுடைய மாமன் மகன் நார்மண்டி பிரபு வில்லியம் என்பவன் அரசனைக் காண இங்கிலந்துக்கு வந்தானும். அப்பொழுது, தனக்குப் பிள்ளைகள் இலலாததால், தன் இங்கிலந்து ராஜ்யத்தை அந்த வில்லியமுக்குக் கொடுப்பதாக வாக்களித்தானும் அரசன்! அந்த வாக்குறுதியுடன் தன் சொந்த நாடு திரும்பிய கொஞ்ச காலத்திற்குப்

பிறகு, இங்கிலாந்தை அனுஷ்டானத்தில் ஆண்டுவந்த ஹேரால்ட் ஏதோ கடல் பிரயாணம் செய்த காலத்தில் புயல்காற்றி லகப்பட்டு நார்மண்டி கரையில் ஒதுங்க நேரிட்டது!

அந்தச் சமயத்தில் வில்லியம் ஹேரால்டை கௌரவக் கண்காணிப்பில் வைத்து அரண்மனைக்கு அழைத்துப்போய் வஞ்சகமாய் சில மத கிரந்தங்களை மேஜைத் துணியில் மறைத்துவைத்து, அதன்மேல், "இங்கிலாந்து ராஜ்யத்தை வில்லியம் பெறுவதற்கு வேண்டிய உதவியை நான் செய்வேன்" என்ற ஒரு பிரமாணத்தை ஹேரால்டினிடம் பெற்றுக்கொண்டானும்! அதன் பிறகு தான் சுயேச்சையுடன் ஹேரால்ட் இங்கிலாந்துக்குத் திரும்ப முடிந்தது.

இங்கிலந்து வந்த சிலகாலத்தில் 1066-ல் அரசன் எட்வர்ட் இறந்தான். ஏற்கனவே ஆளுவதில் அனுபவம் பெற்றிருந்த ஹேரால்டையே அரசனாக விட்டன் சபையார் நியமித்துவிட்டனர். நார்மனிய வில்லியம் எட்வர்ட் செய்த வாக்குறுதியின்படி இங்கிலந்து ராஜ்யம் தனக்குரிமையென்றான். விட்டன் சபையார் "அப்படி வாக்களிக்க எட்வர்டுக்கு யாதொரு உரிமையும் கிடையா" தென்றனர். ஹெரால்டு செய்த பிரமாணத்தின்படி தனக்கு ஹெரால்டு ராஜ்யத்தையடைய உதவி செய்யக் கடமைபட்டவன் என்று வாதாடினான். "அந்தப் பிரமாணம் ஆபத்தி லகப்பட்டுக்கொண்டபோது வலியத் துன்புறுத்தி வாங்கிய ப்ரமாணம் ஆனதால் கட்டுப்படுத்தாது" என்றனர். இந்த நிலையில் 1066-ல் ஹெரால்டே இஙகிலாந்தின் அரசனாக நியமிக்கப்பட்டான். (இராஜ்யம் பெருக்க ஆசை வந்ததும் எவ்வளவு அடாத செய்கைகளையும் மனிதர் செய்யத் தொடங்குகின்றனர் என்பதற்கும் "பேராசை பாவமென்றே நவிலுதடாதர்மம்! பேராசை நாசமென்றே பேசுதடா தர்மம்" என்பதற்கும் ஆக்ஷேபனை உண்டோ?)

இனி அடுத்து வில்லியம் இங்கிலாந்தை ஆங்கிலேயரை கேவலம் மிருகப் பிராயமான அடிமைத்தனத்திலாழ்த்திய விவரம் எழுதப்படும்.

# எதிர்கால நவீன நாகரிக ஜோடி.




ஆண்களுக்குரிய "எல்லா உரிமைகளும்" பெண்களுக்கும் வேண்டும் என்கிறார்கள். அப்பொழுதுதான் குடும்ப வாழ்க்கையில் இன்பம் ஏற்படுமாம். இவ்வின்பம் இப்படத்தில் கண்டு களியுங்கள்.

# வாலிபப் பருவம்

(டர்பன், சரஸ்வதி சபைத்தலைவர்.
திரு. ச. முனிஸ்வாமி பிள்ளை அவர்கள்.)

உலகப் பிரசித்தி வாய்ந்த ஹாவ்லாக் எல்லிஸ் (Havelock Ellis) தாம் எழுதிய ஒப்புயர்வற்ற "ஆண், பெண் மக்களின் தத்துவம்" (Psychology of Sex) என்ற நூலில் "மத சம்பந்தமாக நாம் செய்ய வேண்டிய ஆராய்ச்சிகளை யெல்லாம் செய்துவிட்டோம். இனி ஆண் பெண் மக்களின் தத்துவ சம்பந்தமாகத்தான் நாம் ஆராய்ச்சிகள் செய்யவேண்டும்" என்று கூறியுள்ளார். இக்கூற்றின் உண்மையை நாமுணர்ந்து கொள்வது அருமையல்ல. ஆறு பாகங்களாகப் பிரிக்கப்பட்ட அவர் எழுதிய அருமை மிக்க நூலைப் படித்தபோது ஆண் பெண் சம்பந்தமான எவ்வளவோ புதிய உண்மைகளை நாம் உணர்ந்து கொண்டோம். மகாத்மா காந்தியால் மிகப் பெரியவரென்று பாராட்டப்படும் எட்வர்ட் கார்பெண்டர் (Edward Carpenter) எல்லிஸ் எழுதிய சிறந்த நூலை மிகவும் புகழ்ந் தெழுதுகிறார். நம் வாழ்க்கையின் நடுச் சக்கரமா யிருக்கிறது ஆண் பெண் விஷயமே என்பதை அறியாதாரில்லை. உலகத்தின் இன்ப துன்பத்திற்கும் அதுவே காரணமாம். இம் முக்கியமான விஷயத்தைப்பற்றிய உண்மைகள் பெரும் பான்மையோருக்குத் தெரியாது. அவ் வுண்மைகளை யெல்லாம் இச்சிறு கட்டுரையில் கூறுவதும் சாத்தியமாகாது. அல்லாமலும், அவ்வுண்மைக ளெல்லாம், பத்திரிகையில் வெளிப்படுத்த கூடியனவுமல்ல. எல்லிஸ் அவர்கள் தம் புத்தகத்தை அமெரிக்காவில் முதன்முதல் வெளிப்படுத்தியபோது அது இங்கிலாந்துக்கு வரக்கூடாதென்று தடுக்கப்பட்டது. ஆயினும், உலக நன்மையைக் குறித்து நாற்பது ஐம்பது வருடங்களாக அரும்பாடுபட்டு எழுதிய அப் புத்தகத்தைத் தம் நாட்டில் வரக்கூடாதென்று தடுத்த குற்றத்தை ஆங்கிலேயர் பின்னர் உணர்ந்துகொண்டு அந்நிபந்தனையை நீக்கிவிட்டனர்.

இந்தப் புத்தகத்தில் அவர் மிகவும் பயங்கரமான உண்மைகளைக் கூறுகிறார். அவ் வுண்மைகளை யெல்லாம் திரட்டிக்கூற இங்கு இடமில்லாமை பற்றி வருந்துகின்றோம்.

ஓர் ஆண் மகன் பதினன்கு வயதடையும்வரையில் அவன் ஆணுமல்ல, பெண்ணுமல்ல. இங்ஙனமாதலாலேதான் பதினன்கு வயதுக்குக் குறைந்த ஆண் பிள்ளைகளை பெண்ணை நேசிப்பதுபோலவே நாம் நேசிக்கின்றோம். ஓர் ஆண் மகனுக்குப் பதினன்கென்ற பருவம் மிக்க பயங்கரமானது. இந்த பருவத்திலிருந்துதான் அவன் பிற்கால வாழ்வு ஆரம்பமாகிறது. இந்தப் பருவத்தில்தானே அநேக பையன்கள் கெட்டு விடுகிறார்களென்று எல்லிஸ் கூறுகிறார். இக் கேட்டிற்கு அநேக காரணங்க ளுள்ளனவென்றாலும் அவற்றுள் ஓர் பணிப் பெண்ணைக்கொண்டு பையனை வளர்ப்பதும் ஒன்றாகுமென்று உடற்

கூற்று நூல் வல்லார் சொல்லுகிறார். இந்தப் பணிப்பெண் பையன் கோபமாயிருக்கும்போது அவன் கோபந் தணியவேண்டி அவனுக்கு ஒருவிதமான இன்பத்தை ஊட்டுகிறாளாம். பணிப்பெண் வைத்துக் குழந்தைகளை வளர்ப்பது அநேகமாய் நம் இந்தியர்களிடத்திலில்லை. இது தப்பினும், பள்ளிக்கூடத்தில், இன்னொரு கண்டமிருக்கிறதென்று அவர் மொழிகிறார். இந்தக் கண்டத்தைத் தப்புவதுதான் மிகவு மரிது. இவர் உலகத்திலுள்ள பல பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலுமுள்ள பையன்களின் உண்மைகளை எல்லாம் அறிந்து வெளியிடுகிறார். ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் கல்லூரியிலும், ஒழுக்கங் கெடாமலிருக்கும் பிள்ளைகள் நூற்றுக்கு எட்டு, ஒன்பது தேர்வதும அருமையாம். பன்னிரண்டு வயதிலிருந்தே இப் பையன்கள் கெட்டு விடுகிறார்கள்.

சிறுவர்கள் அழிவதற்குக் காரணம் தற்கால நாகரிகமென்று சொல்லுவது குற்றமாகாது. பிரமசர்யத்தின் பெருமையும் குணமும் இக்காலத்தில், பெரும்பாலோருக்குத் தெரியாமற் போயின. நம் ஆன்றோர் பிரமசர்ய ஒழுக்கத்தை மிகவும் வற்புறுத்தினர். ஒவ்வோர் இளைஞரும் இவ்வொழுக்கத்தை அனுசரிக்கக் கடமைப்பட்டிருந்தனர். சிற்றின்பத்திற்கு ஏதுவான விஷயானுபவங்களிலிருந்து அவர்கள் காக்கப்பட்டனர். பிரமசர்யத்தை அநுட்டிப்பதால், உண்டாகும் பிற்கால நன்மைகளையும் அவர்கள் உணர்ந்திருக்கினறனர். கல்வி கற்பதைக் காட்டிலும், பிரமசர்யத்தின் உண்மைகளை உணர்ந்துகொள்ளலே சிறந்ததென அவர்கள் கொண்டுவந்தனர். அவர்கள் பெற்றோர்களும், அவர்கள் பிற்கால வாழ்வில் கண்ணுங் கருத்துமாயிருந்து வந்தனர். இவர்களுக்குக் கல்வி போதிக்கும் குருவும், இவர்களிடத்துத் தந்தையை யொத்த பரிவுடையவரா யிருந்தனர். இக்காரணத்தால்தான் அக்காலத்தில், ஆசிரியர் ஐங்குரவருள் ஒருவராக மதிக்கப்பட்டனர். பிரமசர்யத்தை அநுட்டிக்கும் பிள்ளைகள் பெரும்பாலும் மனித சஞ்சாரமில்லாத காட்டிலே தம் ஆசிரியரோடு சென்று தங்கள் பிரமசர்ய பருவம் முடிந்து கல்வித்துறையில் சிறக்குங்காறும் அங்கிருந்து "என்ன நோன்பு நோற்றாள் இவனைப்பெற்ற வயிறுடையாள்" என்று கண்டவரெல்லாம் பாராட்டும்படியான இளஞ்சிங்கங்களாய் வளர்ந்து கிருகஸ்தாசிரமத்தை மேறகொள்வர். தற்கால நாகரிகம் அவ்வொழுக்கத்தை அடியோடு கவிழ்த்து விட்டது.

நாகரிக மடைந்த தேசங்களில், அமெரிக்கா மிகவும் உயர்ந்ததாமென மதிக்கப்படுகிறது. அங்குள்ள இளைஞரைப்பற்றி வால்ட் விட்மன் (Walt Witman) என்பவர் "இங்குள்ள பிள்ளைகள் வீரமில்லாமல், இளவயதிலேயே முகம் வெளுத்து, தலைநரைத்து, முதுகு வளைந்து, நரம்புந் தோலுமாய் தொண்ணூறு வயதடைந்த கிழவர்களைப்போல், நடைப்பிணங்களாய்ச் சுடுகாட்டை நோக்கி நிற்பவர்களா யிருக்கிறார்கள். இவர்கள் நிலை மிகவும் பரிதபிக்கக்கூடியது" என்று கூறியிருக்கிறார். இங்கிலாந்து முதலிய நாடுகளிலுள்ள பிள்ளைகளைப்பற்றியும், இங்ஙனேதான் ஹாவ்லாக் எல்லிஸ் முதலிய அறிஞர்கள் கூறுகின்றார்கள். இவ்வுண்மைகளை யெல்லாம் ஆலோசிக்குங் காலத்தில் தற்கால நாகரிகமானது உலகத்தின் புரை நோயாயிருக்கின்றதென்பது செவ்விதின் விளங்கும். "நாகரிகமும் அது வந்தவாறும், அதனை நீக்கும் வழியும்" (Civilization; Its cause and cure) என்ற அருமை மிக்க நூலில்,

எட்வர்ட் கார்ப்பண்டர் இப் போலி நாகரிகத்தின் தன்மைகளை யெல்லாம் எடுத்துக் கூறியிருக்கிறார்.

வாலிபர்கள் அழிவதற்கு இன்னும் எத்தனையோ வழிகளுண்டு. பெண், ஆண் இன்பம் இன்னதென்று தெரியாமலே இளமைப் பருவமானது கழிய வேண்டுமென்று எல்லா அறிஞர்களும், வைத்திய நிபுணர்களும் தேக தத்துவ நூலாரும் கூறியிருக்கின்றார்கள். இந்த விதமாகத் தம் பிள்ளைகளைக் காக்க வேண்டிய கடமைகளைப் பெற்றோர்களும் அப்பிள்ளைகளைக் காத்து வருவோர்களும் இன்றியமையாததாகக் கொள்ளவேண்டும். எத்தனையோ வாலிபர்கள் இன்பம் ஒன்றையே கருதிக் கெட்டழிந் திருக்கிறார்கள். வயதில் இளைய பெண்கள் தம்மின் மூத்தவர்களையும், வயதில் மூத்த ஸ்திரீகள் தம்மைக் காட்டிலும் வயதில் குறைந்தவர்களையுமே விரும்புகிறார்க ளென்று எல்லிஸ் அவர்கள் கூறுகிறார். ஆதலால், வாலிபர்கள் தங்களைக் காட்டிலும் வயதின் மூத்த கைம்பெண்களையும், மற்ற ஸ்திரீகளையும் கண்டு விலக்கிவிட வேண்டும். இளைஞர்க்குத் தம்மின் மூத்த ஸ்திரீகளோடு எந்த வழியினும் தொடர்பிருக்கக் கூடாது. மூத்தவர்களான ஆண்கள் பெண்கள் கூட்டுறவை விரும்பி அதில் இன்பம் காண்பதுபோல், இளைஞரும் பிறர் கூட்டுறவை விருமபி அதில் இன்பம் காண்கிறார்களென்று எட்வர்ட கார்ப்பெண்டர் சொல்லுகிறார். ஆயினும், இவர்களுககுள் ஒரு வித்தியாச மிருக்கிறது. மூத்தவர்கள் சூக்ஷ்ம இன்டத்தை வெறுத்து ஸ்தூல இன்பத்தை நாடுகிறார்கள். இளைஞர்க்கு ஸ்தூல இன்பமும், சூக்கும இன்பமும் ஒன்றேயாகும். ஆதலால், ஒழுக்கமுள்ள வாலிபர்களின் கூட்டுறவும், தங்கள் பெற்றோர்களின் நட்பும், அன்பும் இவர்களுக்கு வேண்டுவது அவசிய மாகுமென்றும், அவர் பின்னும் கழறுகின்றார். எந்தவகையிலும் இளைஞர்க்குச் சிற்றின்பத்தில், அவா வுண்டாகாதபடி பார்த்துகொள்ள வேண்டும். தற்கால நாகரிகமே சிற்றின்பத்தில் அவா வுண்டாவதற்கு ஏதுவாகின்றதென்றும் அவர் கூறுகிறார்.

இந்த நாகரிகத்திற்கும், பணத்திற்கும் மிகவும் சம்பந்த மிருத்தலால், பணக்காரர்கள் கெட்டுப்போவது சாதாரணமா யிருக்கின்றது. இதன் பயனாகவே பணக்காரர்கள் க்ஷீணமடைந்து விடுகிறார்கள். அவர்களுக்குச் சந்ததி அபிவிருத்தியுமில்லை. இவ்வுண்மையை மிகச் சிலரே உணர்ந்திருக்கின்றனர். "தேச சுகாதாரம்" என்ற ஓர் ஆங்கில பத்திரிகையில், ஒருவர் எல்லா வசதிகளுமுடைய பணக்காரர்கள் சந்ததி அபிவிருத்தி செய்யமுடியாமலும், ஒரு வசதியுமில்லாத குடியானவர்கள் சந்ததி அபிவிருத்தி செய்யக்கூடியவராகவு மிருக்கின்றனரே, தகுதியுள்ளவர்கள் நிலைத்திருத்தல் (Survival of the fittest) என்பது போய் தகுதி யல்லாதவர்கள் நிலைத்திருத்தலென்று (Survival of the unfittest) தலைகீழாய் மாறிவிட்டதே என்று இரங்குகின்றார். இவர் எல்லிஸ் முதலியவர்களைப்போல் விஷயங்களை நுணுக்கமாய் அறிபவரல்லரெனத் தெரிகிறது. உண்மை தலைகீழாய்ப் புரண்டு விட்டதற்கு நாகரிகமே காரணமென்பதை அவர் தேறவில்லை.

தற்கால நாகரிக வாசனை சிறிது மில்லாமலே நாம் நம் பிள்ளைகளை வளர்க்கவேண்டும். பிள்ளைகளைப் பள்ளிக்கூடங்களுக் கனுப்பிக் கல்வி கற்பிப்பதைப் பார்க்கிலும், உத்தம குணங்களுடைய ஒரு நல்லாசிரிய ரிடத்து

விட்டுக் கல்வி கற்பிப்பதே சிறந்ததாகும். இந்நாட்களில் அப்படிச் செய்ய முடியாவிட்டால், நல்லொழுக்கத்தையும், பெண் ஆண் தத்துவ விஷயங்களையும், அவர்களுக்குப் போதித்து வரவேண்டும். ஒரு தேசத்தின் நம்பிக்கை அதன் இளைஞர்களிடத்தி லிருக்கிறது. ஆதலால், பெற்றோர்களேயன்றித் தேசமும், இளைஞர்களின் நலத்தில் கருத்து வைக்கவேண்டும். இல்லையேல் அத்தேசம் குன்றியழியும். நம் அரசியல் அறிஞர் கருத்துக்கள் எங்ஙனமாயினும், தற்கால நாகரிகம் ஒரு தேசத்தின் உயிரை அரித்துத் தின்னுவதென்ற வகையில் எல்லாரும் கருத் தொருமைப்பட்டவரா யிருக்கவேண்டும்.



# இது அல்லவா கருணை?



பாதிரியார்:—"என்ன அப்பன்? எங்கே வந்தாய்?"

ஆதிதிராவிடர்:—ஆண்டவரே! பையனைப் பள்ளியில் சேர்க்கவந்தேன். அங்கே—ஒரு பள்ளிக்கூடத்தில் வாத்தியார் ஐயர் அடித்துத் துரத்திவிட்டார். தாங்கள்தான் கருணை செய்யவேண்டும்."

பாதிரியார்:—" ஆஹா! அப்படியே ஆகட்டும். நீ கவலைப்படவேண்டாம். சாப்பாடு முதல் சகலமும் நானே கவனித்துக்கொள்ளுகிறேன். என் குழந்தை அல்லவா இது?"



# சிறு கதை

## பதி-லில்லியம்

(பண்டிதை—ரா. ரங்கநாயகி.)

"உங்கள் பெண் ஷேக்ஸ்பியர் படித்திருக்கிறளா?"

"இல்லை"

"டென்னிஸ் விளையாடுவாளா?"

"இல்லை"

"போகட்டும்!—பிரசங்க மேடைகளில் ஏறிப் பேசுவாளா?"

"இல்லை"

"சரி! சரி!! இனி என்னதான் தெரியும் என்று நீங்கள்தான் சொல்ல வேணும்!......ஒன்று கேட்க மறந்துபோனேன். ஹாமோனியத்துடன் உள்ளத்தை உருககிவிடும்படி—கேட்போர் தங்களைத் தாங்களே மறந்துவிடும் படி.........பாடுவாளா?"

"ஏதோ கொஞ்சம் பாடுவாள்; ஆனல் சங்கீத சபைகளில்—கச்சேரிகள் செய்யும்படியான அவ்வளவு பாண்டித்தியம் இல்லை.........ஐயா! ஒரு வார்த்தை—கோபம் வைத்துக்கொள்ளுவதில்லை யென்றால் வெளியிடுகிறேன்" என்று சிதம்பரநாதம் பிள்ளை விநயமாகச் சொல்ல, பக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருந்த நவீன வித்தியா சம்பந்நனும், திருமகளின் கடாக்ஷ வீக்ஷண்யம் பெற்றவனுமான டி. எஸ். பதி எம். ஏ. "அப்படியே—நல்லது—சொல்லலாம்" என்று மண்டையை ஆட்டினன். சிதம்பரநாதம் பிள்ளை கரைபுரண்டெழுந்த சினக்கடலை ஒருவாறு தணித்துக்கொண்டு கூறுகிறர்:

"அப்பனே! நாமெல்லாம் இந்துக்கள். பாரத நாட்டுப் பெண்மணிகளின் உண்மைக்கடமைகளையும் தருமங்களையும் அறிந்துள்ள தங்களைப்போன்ற படிப்பாளிகளே, நமது கன்னிபபெண்களைக் குறித்து இப்பேர்ப்பட்ட புதிய கேள்விகளைக் கேட்டால், என்ன பதில் சொல்ல? ஒழுகக நூல்களையும், நீதி நூல்களையும் படித்திருக்கிறளா? பாரத ராமாயணங்களைப படித்து அர்த்தம் சொல்லத் தெரியுமா? அடக்கத்துடன் மாமி—மாமன்மார்கட்குப் பணிவிடை செய்யும் பொறுமைக குணம் இருக்கிறதா? முக்கியமாய்ப் பெண்கட்குரிய நாற்குண-நற்குணங்களெல்லாம் பொருந்தி யிருக்கின்றனவா? என்று கேட்பதற்குப் பதிலாகக் குதிரைச் சவாரி செய்யத் தெரியுமா? மோட்



டார் ஓட்டத் தெரியுமா? ஒலம்பிக் பந்தயங்களில் ஓட்டம் பிடிக்கத் தெரியுமா? நாடக மேடைகளில் பேரும் புகழும் வாங்கத் தெரியுமா? பொடிப் போடத் தெரியுமா? சிகரெட் பிடிக்கத் தெரியுமா? என்று கண்டும் கேட்டும் அறியாதவகையில் விபரீதக் கேள்விகள் கேட்டால்.........அடடா! என்ன கலிகாலம்! படித்தவர்கள் எல்லாரும் இந்தமாதிரி விந்தைக் கோரிக்கைகளைக் கோருமபக்ஷத்தில இந்துக் கன்னிகைகள் அனைவரும் கலியாணம் இல்லாமலே இருக்கும்படியாக அல்லவா நேரும்? பணம் கேட்டீர்கள்; சரி! கையில் இல்லாவிட்டாலும் கடன் வாங்கியாவது கட்டிவிடலாம்—இல்லாத பொல்லாத வழக்கங்களை யெல்லாம் வைத்துககொள்ளவேணும் என்றால் யாரால் முடியக் கூடிய காரியம் ஆண்டவனே? இருக்கட்டும் ஸ்வாமி! எங்கள் பெண் எங்கள் வீட்டிலேயே இருக்கட்டும்! அவளது தலையில் பிரமன் எப்படி எழுதியிருக்கிறானோ அப்படியே நடக்கட்டும்"—இவ்வாறு சற்றே ஆத்திரங் காட்டிப் பேசி விட்டுக் கண்ணைமூடியவராய் வியர்த்த முகத்தைக் கைக்குட்டையால் துடைத்துக்கொண்டு, விசனக் கடலுள் மூழ்கினார் சிதம்பரநாதம பிள்ளை. மருமகன் ஆவான் என்ற மலையளவு ஆசையுடன் பக்கத்தில் உட்காரவைத்துத் தம்மால் ரஜோபசாரம் செய்யப்பெற்ற டி. எஸ். பதி, எம். ஏ., எப்பொழுது எழுந்து சென்றான் என்பதுகூடச் சிதம்பரநாதம் பிள்ளைக்குத் தெரியாது. பாவம்! மெய்ம்மறந்து ஏமாந்துபோய் அப்படியே உட்கார்ந்துவிட்டார். படிக்கும் நிலைமையில், மட்டற்ற மனோராஜ்யத்தில், சுயேச்சையாய்ச் சஞ்சரித்துத்திரிந்த சர்வகலாசாலைப் பட்டதாரிகளில் டி. எஸ். பதியும் ஒருவன். "பள்ளிப் படிப்பு புள்ளிக்குதவாது" என்ற உண்மையை அறியாதவனாய் எம். ஏ., என்ற இரண்டெழுத்துக் கிடைத்தவுடன் உலகமே தன் கைக்குள் அடங்கிவிட்டது என்று தலைகால் தெரியாமல் திரியத் தொடங்கினான். இந்த இரண்டெழுத்தே சிதம்பரநாதம் பிள்ளையையும் மயக்கியது. பாவம! இன்று எதையோ பறி கொடுத்தவர்போல் ஆகிவிட்டார். பெண்களைப் பெற்றவர்களின் கஷ்டங்களைப் பெண்களைப் பெற்றவர்களே அறிவார்கள். மாடுகளைப் பெற்றவர்களும், திண்ணை வேதாந்திகளும், கட்டை பிரமசாரிகளும் அறிவார்களா?

(2)

"உலகில் வாழ்நாள் மிகமிக அற்பம். இதை அறிந்திருந்தும் மனிதன் எப்பொழுதும் தற்காலிக போக போககியங்கட்கு அடிமைப்பட்டவனாய்த் தனனை மறந்து அலைதல் சர்வ சாதாரணமாகிவிட்டது. தற்காலத்தில் இருக்கும் படிப்புமுறையும் மக்களின் வயிற்றுப் பிழைப்பிற்கோ ஆன்ம சாந்திக்கோ வழிகாட்டுவதாய் இல்லை. பழமையெல்லாம் அநாகரிகம்—புதுமை யெல்லாம் நாகரிகம் என று நினைக்கும்படியான அறியாமை நமது பட்டதாரிகளிடம் சகஜமாக அமைந்திருக்கின்றது. "தான் கெட்ட குரங்கு வனமெல்லாம் கெடுத்தது"போல் தாங்கள் கெட்டதுமன்றித் தங்கள் மனைவிமார்கட்குங்கூட "நாகரிக' ப் பைத்தியம் ஏற்றிக் குடி கெடுக்கும் வாலிபர்களையும் தற்காலக் கல்வி உற்பத்தி செய்து வருகிறது. இன்னொரு பக்கத்தைக் கவனித்தால் அதுவும் விபரீதமாகவே தோன்றும். நமது நாட்டில் பொருளற்ற வழக்கங்களும் ஒழுக்கங்களும் கொடுமையான முறையில் செறிந்து கிடக்கின்றன. பகுத்தறிவிற்கு அணுவளவும் மரியாதை இல்லை. ஆணுக்கொரு நீதி—பெண்ணுக்கொரு நீதி. பெண் வடிவம் என்றால் அது சமையல் அறைக்கும் படுக்கை அறைக்கும் தகுதியாகச் சிருஷ்டிக்கப்பட்டது

என்பது சாஸ்திர விதி. ஆடவன் பரம அயோக்கியனா யிருந்தாலும் சாஸ்திரங்கள் தொட்டுந் தொடாமல் ஜாடையாக விட்டுவிடுகின்றன. பெண் பதிவிரதை அல்லவென்று புருஷனுக்கு அணுவளவு ஐயம் தோன்றினாலும் போதும்—அவள்பாடு அதோ கதிதான். சாஸ்திரங்களும் சமூகமும் அவளைச் சாமானியத்தில் விடமாட்டா. இது சாதாரணமாய் நாம் நாடோறும் காணும் காட்சி. எத்தகைய வேற்றுமையும் இன்றி, ஆண் பெண்களுக்கு பக்ஷபாதம் அற்ற தருமவிதி ஏன் இருக்கக்கூடாது என்பது விளங்கவில்லை. "வல்லான் வகுத்ததே வாய்க்காலாக" நடக்கிறது உலகம். சரி! ஏதோ நம்மால் இயன்றதைச் செய்வோம்" என்று சிந்தித்துக் கொண்டே ஒரு முடிவு கொண்டவனாய் ஆற்றங்கரையினின்றும் வீடு நோக்கி நடந்தான் மாணிக்கவாசகன். மாணிக்கவாசகன் சமீபத்தில்தான் இன்டர்மீடியட் பரீக்ஷை எழுதிவிட்டு விடுமுறையில் ஊருக்கு வந்திருக்கிறான். மிகவும் அடக்கமும் ஒழுக்கமும் உள்ளவன். படாடோபம் இல்லாதவன். தமிழ்மொழியில் மிகவும் பற்றுள்ளங் கொண்டவன். சமூக சீர்திருத்த ஆர்வங்கொண்டவன். சத்தியவாதி. பரோபகாரி. கல்விக்கேற்ற அறிவும், அறிவுக்கேற்ற நடையும் வாய்ந்தவன். இவற்றிற்கேற்ப நல்ல வடிவழகும் பொருந்தியவன். இவ்வாண்டுடன் ஆங்கிலப்படிப்பை நிறுத்திவிட்டுத் தன் சொந்தக் கிராமத்திலேயே வசிக்கவேண்டும் என்று முடிவு செய்துகொண்டான். நாட்டின் வறுமை நிலைமையும் அரசியல் நெருக்கடியும் மாணிக்கவாசகனின் மனதை ஒருவாறு வாட்டிக் கொண்டிருந்தனவாயினும் நமது நாட்டின் விடுதலைக்குச் சமூக முன்னேற்றமே முதலில் ஏற்படவேண்டும் என்ற நம்பிக்கை கொண்டவன். அதிலும் கிராம புனருத்தாரணத்தில் அவனது மனம் ஊன்றி நின்றது. தன் சிறிய குடும்பத்தை நிர்வாகம் செய்வதோடு பொதுநலத் தொண்டும் இயன்ற அளவில் செய்யவேண்டும் என்றே முடிவாகத் தீர்மானித்துக் கொண்டான். அக்கிராமவாசிகளும் மாணிக்கவாசகனிடம் மிகுந்த அன்புபாராட்டினர். அன்பு அன்பை ஆகர்ஷிக்குமே யன்றி பொன் பொருள்களை லக்ஷியம் செய்யுமோ? மாணிக்கவாசகனின் பரோபகார சிந்தை அவனது கீர்த்தியை எங்கும் பரவுமாறு செய்தது .சிதம்பரநாதம் பிள்ளையும் இதை அறியாமல் இல்லை.

(3)

டி. எஸ். பதி, எம். ஏ., திருமகளும் நாமகளும் ஒருருக் கொண்டாலன்ன—நவநாகரிகப் பெண்மணி கிடைத்தாலொழியத் திருமணம் செய்வதில்லை என்று கங்கணங் கட்டிக்கொண்டிருக்கிறான். தான் நினைத்துக்கொண்டிருக்கும் முயற்கொம்பைக் கண்டுபிடிக்கத் தேடித்தேடி—முன்னோர்கள் ஈட்டிவைத்த பெரும் பொருள் முழுவதையும் நட்டாற்றில் கரைத்துவிட்டான். பிறகு ஏதேனும் உத்யோகம் பார்க்கவேண்டும் என்ற நெருக்கடி தோன்றிற்று. இந்தக் காலத்தில் யார் உத்தியோகம் கொடுப்பார்கள்? நாடோடியைப்போல் சும்மா அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருந்தான். அந்தஸ்து குறையாமல் "ட்ரெஸ்" வகையராக்கள் செய்து கொள்ளவேண்டியது மிக மிக முக்கியமாகி விட்டபடியால் அவைகளைச் சமாளிப்பதே பெரும் திண்டாட்டமாயிருந்தது. சேவகாவிருத்தி—இல்லை—உத்தியோகம் வாங்கிக் கொடுக்கிறேன் என்று ஆசைகாட்டியவர்கட்கெல்லாம் கடன் வாங்கி வாங்கி லஞ்சங்கொடுத்துக் கொடுத்து ஏமாற்றம் அடையவேண்டிய நிலைமையே ஏற்பட்டது. கடன் கொடுத்தவர்கள் எல்லோரும் குத்திக்குடையத் தொடங்கிவிட்டார்கள். தெருவில் நடப்

பதற்கே முடியாமல் போய்விட்டது. திருடனைப்போல் ஒளிந்து திரிந்து கொண்டிருந்தான். காபி கிளப்புகளிலும் சாப்பாட்டு ஓட்டல்களிலும் பாக்கிகள் பெருகி விட்டமையால் வர வர வயிற்றுக்கே திண்டாட்டம் ஏற்பட்டு விட்டது. "என்ன செய்வேன் ஈசுவரா?" என்று திக்குத் திசை தெரியாமல் நாடோறும் யோசனையில் மூழ்கி—ஒருநாள் இரவில் பம்பாய்க்கு மூட்டை கட்டத் தொடங்கினான். பம்பாயில் தரித்திரர்களைக் கண்ணெடுத்துப் பார்க்கின்றவர்கள் யார் இருக்கிறார்கள்? டி. எஸ். பதி. எம். ஏ., பம்பாய் ரயில்வே ஸ்டேஷனில் இறங்கி எங்கே போவது என்று தெரியாமல் பிளாட்பாரத்தில் அங்கும் இங்கும் உலவிக் கொண்டிருந்தான். கையில் போதிய பணமும் இல்லை. இங்கே கடன் கொடுப்பவர்களும் இல்லை. திடீரென்று யாரோ பின் பக்கமாக வந்து நின்றதை அறிந்து திரும்பிப் பார்த்தான். ஆஹா! அவனது ஆனந்தத்தை என்னென்று வருணிக்க? தரித்திரன் புதையலைக் கண்டதுபோல் உள்ளம் பூரித்தான். "ஓ ஹோ! மிஸ் லில்லீ!"—'ஹாலோ! மிஸ்டர் பதீ! எப்பொழுது வரவு?" என்று இருவரும் கைகுலுக்கிக் கொண்டார்கள். அந்தப் புதிய பெண் ஒரு ஆங்கிலோ—இந்திய மங்கை. அவளுடைய பெயர் மிஸ் லில்லி. பம்பாய் நகரில் ஒரு பிரசித்தி பெற்ற மருந்து வியாபாரியின் மகள். டி. எஸ். பதி சென்னையில் வாசித்துக் கொண்டிருந்த பொழுது அவளும் அக்கல்லூரியில் வாசித்தவள். பன்னாட்களாகப் பிரிந்து நின்ற சகபாடிகள் திடீர்ப்பிரவேசமாய்ச் சந்திக்க நேர்ந்தால் கேட்க வேண்டுமா? அந்தச் சுகம் அநுபவித்தவர்கட்கே புலனாகும். இருவரும் பரஸ்பரம் தங்கள் கதைகளை மிகுந்த ஆவலுடன் கேட்டுத் தெரிந்து கொண்ட பிறகு, ஸ்டேஷனைவிட்டு, வெளியே நின்று கொண்டிருந்த ஒரு காரில் ஏறிப் புறப்பட்டு விட்டார்கள். வண்டி ஒரு பெரிய மருந்துக்கடையின் எதிரில் நின்றது. லில்லியும் பதியும் காரினின்றும் இறங்கிக் கடைக்குள் நுழைந்தனர். லில்லியின் தந்தையும் அவர்களை எதிர் சென்றழைத்து மிகுந்த மரியாதையுடன் தகுந்த ஆசனங்களைக்காட்டி வீற்றிருக்கச் செய்தார்.



"அப்பா! இவர் என் சகபாடி. வீட்டில் தாய் தந்தையர்களெல்லாரும் பழைய அநாகரிகக் கர்நாடகங்களானபடியால் இவர் தம்மால் ஆனவரை சீர்திருத்தப் பாடுபட்டுவிட்டு முடியாமல் வெளியேறி வந்து விட்டார். இவருடைய தாய் தந்தையர் பழைய வைதிகப் பிடுங்கல்கள் என்பதை நானும் அறிவேன். மிஸ்டர் பதி எம். ஏ. பட்டம் பெற்றவர். அதிர்ஷ்ட வசத்தால் நான் இவரை ஸ்டேஷனில் காணநேர்ந்தது. கூடவே வீட்டுக்கு அழைத்து வந்தேன். நமது ஷாப்பில் இவருக்குத் தகுந்த உத்தியோகம் கொடுத்து ஆதரித்தால் மிகவும் நலமாயிருக்கும்" என்று தந்தையிடம் சிபார்சு செய்தாள் லில்லி. அவரும் தம் மகளின் மீதுள்ள அன்பினால் சம்மதித்துப் பதிக்கு ஒரு

குமாஸ்தா உத்தியோகம் கொடுக்க ஏற்பாடு செய்தார். ஸ்ரீமான் பதியும் வாயை மூடிக்கொண்டு காரியம் பார்க்கத் தொடங்கினன். "குடை நிழலிருந்து குஞ் சர மூர்த்தோர்—நடை மெலிந்தோரூர் நண்ணினும் நண்ணுவர்" என்பது மெய்யா ? பொய்யா ?

(4)

அன்பும் மாட்சியும் மிக்க மாமா அவர்களின் திருவடிக்கமலங்கட்கு. மாணிக்கவாசகன் அநேக நமஸ்காரம். நலம். நலமே விரும்புகின்றேன். தங்கள் நிருபம் கிடைத்தது.

தங்களுடைய கிருபாகடாக்ஷத்தினுலன்றோ நான் ஒரு குடும்பஸ்தன் ஆனேன். எனக்குத் தாய் தந்தையர் இல்லாத பெருங்குறை தங்களால் தீர்ந்தது. தங்கட்கு நான் செய்யும் கைம்மாறு என்ன உண்டு என்பது விளங்கவில்லை. தங்கள் பெருந்தன்மையையும் நன்றியையும் நான் என்றும் மறவேன். தங்கள் திருவடிக் கமலங்களில் படிந்த தூளியை என் சிரமேற் கொண்டு ஆயுள் அளவும் போற்றி வருவேன். தாங்கள் கொடுக்க விரும்பிய வர தக்ஷிணை முதலிய பொருள்கள் எனக்குப் பிரதானம் அல்ல. பரம பரிசுத்தமாகிய இப் பாரத பூமியை அணி செய்து, தங்கள் பதிவிரதா தரும மகிமைகளைச் சாசுவதமாக்கி, இன்றும் நமக்கு ஆதர்சமாக விளங்கும பெண்மணிகளின் வாழ்க்கை வரலாறுகளெல்லாம் உண்மை உண்மை-கற்பனைக்கதைகள் அல்ல அல்ல என்று யாவரும் உணர்ந்து கொள்ளுமாறு ஒளிரும் தங்கள் திருவளர் செல்வியே எனக்கு லக்ஷோப லக்ஷம். ஒழுகமே உயிர் என்னும் உண்மையை நான் அறியாதவன் அல்லன். மேற்பூச்சு வெளிவேஷங்களுக்கு நான் மயங்கி விடுவேனு? வீண் படாடோபமும் ஆடம்பரமும் குடும்பஸ்தருக்கு அழகல்ல. செல்வம், கல்வி, அழகு முதலியன அமைந்திருக்கும் ஆண்களுக்கு ஒழுக்கம் அமைதல் அருமை தான். அங்ஙனம் அமைந்தவர் நூற்றுக் கொருவர் இருத்தலும் அரிது எனலாம். நான் என் ஆயுள் முழுதும் ஒழுக்கத்தை உயிராகப் போற்ற உறுதி மேற்கொண்டுள்ளேன் என்பதை இச்சந்தர்ப்பத்தில் நினைவூட்டிக்கொள்ளுகிறேன். தங்கள் அருமைத் திருமகளின் துணையால் எனக்கு வாய்த்த பெருமையை நான் எம்மொழிகளால் வருணிப்பேன்? "வலிய வந்தால் குலம் என்ன?" என்று கேட்கும் கூட்டத்தைச் சேர்ந்தவன் நான் அல்லன் என்பதை நீங்கள் என்றும் நம்பலாம். தந்தைக்கு நிகராகிய தங்களுக்கு நான் வேறு எதை எழுதுவேன்? தங்கள் பெருந்தகைமையையும் அன்பையும் என்றும் மறவாத,



ஊழியன்,

மாணிக்கவாசகன்.

இந்தக் கடிதத்தைப் படிக்கப் படிக்க சிதம்பரநாதம் பிள்ளை ஆநந்தக் கண்ணீர் சொரிந்தார். அவரது மகிழ்ச்சிப் பெருக்குக்கு எல்லையே இல்லை. "ஏ கருணாகரா! எல்லாம் உன் கிருபாகடாக்ஷமே! ஏழைபங்காளா! தந்தையே! உனது அருள்வலிமை இன்றேல் உலகமே தலைகீழாகாதா? இந்தப் புதிய தம்பதிகளைக் காப்பாற்றிச் சன்மார்க்க வாழ்க்கை அடையச் செய்யவேண்டியது உனது பாரம்!"

(5)

"என் படிப்புப் பாழாய்ப் போக!—என் வாழ்வு மண்ணாய்ப் போக! எதற்காக இந்த நாய்ப் பிழைப்பு? இந்த ஈனப் பிழைப்பு இன்னும் எத்தனையோ காலம் அநுபவித்துத் தொலைக்கவேண்டுமே! இந்து ஜாதியின் உதிரம் என் ஜீவ நாடிகளில் கலந்திருக்கிறது என்னும் உணர்ச்சி ஒரு தடவையாவது நினைவிற்கு வந்ததே!—அதுவேபோதும்! ஆஹா! வில்லீ! ஜாதி வேறானாலும்! நான் எதிர்பார்த்திருந்த லக்ஷணங்களெல்லாம் பொருந்திய பெண்மணி கிடைத்தாளல்லவா?—என்று ஆனந்தக் கூத்தாடினேனே! ஏ! ஜாலக்காரி உனக்கு எங்கே இனிமேல் பதி? நான் யாரை நோவது? என் கர்ம பலன் இது! கலியாணம் முடிந்து இன்னும் பத்து நாட்களுங்கூடப் பூர்த்தியாகவில்லையே! அதற்குள் எத்தனை வாலிபர்களுடன் கைகுலுக்கல்கள்—கசுகுசுக்கள்—சரஸ சல்லாபப் பேச்சுகள்-விளுவுத்தாங்கள். அட ஈசுவரா! நேற்று நாட்டியம் பார்க்க என்று என்னை இழுத்துக்கொண்டு போய், ஒரு மூலையில் உட்கார வைத்துவிட்டு—சீச்சீ! என் கண்ணெதிரில் மனதுக்குப் பிடித்தத் எந்தத் தடியனையோ கட்டித் தழுவி மணிக்கணக்காகக் குதித்துக்கொண்டிருந்ததைப் பார்த்தும், இனி இந்த உயிரை வைத்துக்கொண்டிருக்கவா?........ சிவ சிவ! டான்ஸாம்! அதன் முகத்தில் நெருப்புக் கொட்ட!—பகிரங்க விபசாரம் இல்லைபோலும்!" தத்! இது என்ன பைத்தியம் எனக்கு? ஓ வில்லீ! உன்னைத் தூஷித்ததற்காக என்னை மன்னிப்பாயாக. நீ என்ன செய்வாய் பாவம்! எனது அற்பக் கல்விச் செருக்கால் தலைகால் தெரியாமல் இக்கதியை அடைந்தேன். வலியத் தேடிவந்த பெரிய சம்பந்தங்களையெல்லாம் காலால் உதறித் தள்ளினேன். பெரியவர்கள் தேடிவைத்த ஏராளமான பெருந் திரவியத்தையும் விழலுக்கிறைத்த நீராக்கினேன். குலப் பெருமை குன்றியது. மதிப்பு வெகுநாளைக்கு முன்னே பறந்தோடியது. உற்றார் உறவினரையும் துறந்தேன். உயிர்வாழும் ஆசையையும் துறந்தேன். இப்பொழுது நான்யார்? இந்துவா? அந்தோ! குலப்பிரஷ்டனாகிய எனக்கு மறுபடியும் சமூகத்தில் சேரும் யோக்கியதை யுண்டா? அப்பப்ப! இன்னும் உயிர் வைத்திருக்கவும் ஆசையா? "பாவி! வாழ்க்கையின் அர்த்தம் தெரிந்துகொள்ளாமல், உலகியல் இன்பங்களைப் பெருமையாக எண்ணி எத்தனை நாள் வாழ்ந்துவிடப் போகிறாய்?"—என்று யாரோ உள்ளிருந்து அறிவுறுத்தியது போல் உணர்ந்தான்—சரி! மகா உத்தமமர்களாகிய ஞானிகள் தோன்றிய

பாரத நாடு என் பிறப்பிடம். பெரியோர்களின் அநுக்கிரகம் வாய்ந்த வம்சம் எனது வம்சம். ஆஹா! எனக்கு எப்பேர்ப்பட்ட துரதிர்ஷ்டம் நேர்ந்து விட்டது! என் தலையில் நானே மண்ணைவாரிப் போட்டுக்கொண்டேனே!



ஓ லில்லீ! நான் இறந்து போனாலும் உனக்கு இன்னொரு புருஷன் கிடைப்பான். பிறகு என்னை மறந்துவிடுவாய். எனது அகால துர்மரணம் சும்மா விட்டுவிடாது. என்னைப்போலவே இல்லாத பொல்லாத ஆசைகளில் சிக்கி, அதோகதிக்காளாகப் போகும் இந்திய சகோதர சகோதரிகட்கு என் துர்மரணம் கன்னத்தில் அறைந்து கரையேற்றும் என்பது எனது நம்பிக்கை ஐயோ..............என்—வாழ்க்கை..............முடிந்தது............ வாலிபர்களே................சகோதரிகளே......... ஜாக்கிரதை!''

மறுநாள் டி. எஸ். பதி, எம். ஏ. சரீரம் டாக்டர் வீட்டு அறையில் விறைத்துக் கிடக்கக் கண்டனர் பலர்.

# மூன்றும் வகுப்புப் பிரயாணம்.





# உலக அநுபவம்

(கி. பாலசுப்பிரமணியம், M. A.)

கிராம தேவதைகளுக்குப் பூஜைகள் செய்வதோடு அவ்வப்போது காலப் போக்கிற்காக, அத் தேவதைகளைப்பற்றிக் கதைகளைச் சொல்வது இக்காலத்திலும் சகஜமாக விருக்கிறது. ஒரு காலத்தைவிட அடுத்த தலைமுறையில் இன்னும் அதிகமாகச் சேர்த்து இக் கதைகளைச் சொல்வதும் சாதாரணமே. உதாரணமாக தெய்விக கதையாகிய நாதனார் சரித்திரத்தை யெடுத்துக்கொள்வோம். இக் கதையினால் நமக்கு என்ன நற்புத்தி புகட்டப்படுகிறது? கடவுளுக்கு ஜாதி மதம் முதலிய வித்தியாசங்கள் கிடையாது. எவ்வளவு ஈன ஜாதியனாயினும் உண்மை பக்தனாயின் முக்தி பெறலாமென்று சொல்லவேண்டியதுதான். ஆனால் இப்போது இந்நாடகத்தில் எவ்வளவு சேர்த்திருக்கிறார்கள்? வேதியர் தனியே வந்தால் போதாது. அவருடைய மனைவியும் வரவேண்டும். நகை வாங்கவேண்டும். வீட்டில் விவாக சமாச்சாரம் பேசவேண்டும். வேதியர் தாயாரோ தமக்கையோ அவருடைய மனைவியோடு மனஸ்தாபப்படவேண்டும். இவையெல்லாம எதற்காக? ஜனங்களுக்கு உற்சாகமும் களிப்பும் உண்டாவதற்கு இதெல்லாம் அவசியமாம!

நமது தேசத்தில் மாத்திரமல்ல. இங்கிலாந்திலும் இந்த நாகரிக காலத்திலும் ஒரு விநோத சம்பவம் நடந்தது. சென்ற வருஷம் இமய மலைமீது ஏறுவதற்காக, ஸ்மித் (Smythe) என்பவர் வந்திருந்தார். 26000 அடிக்கப்புறம் போக முடியாமல் திரும்பிவிட்டார். ஆனால் தான் பார்த்த காட்சிகளையும் விநோதங்களையும் படம் பிடித்துக்கொண்டார. இங்கிலாந்து சென்றதும் சினிமா படக் காட்சியில் காட்ட விரும்பினார். ஆனால் எக் கம்பெனியாரும் அதைக் காட்ட ஒத்துக்கொள்ளவில்லை. "இந்த மலைகளும் ஆறுகளும், பனிக்கட்டி மலைகளும் அழகாயிருக்கின்றன. ஆனால் இதில் காதல் விஷயமெதுவுமில்லை. ஆகையால் இதைப் பொது ஜனங்கள் ஆதரிக்கமாட்டார்கள்" என்று சொல்லிவிட்டார்களாம். இயற்கை விநோதங்களைத்தான் எல்லோரும் படம் பிடிப்பார்கள். காதல் விஷயங்களை அவற்றிற்குள் யார் புகுந்து படம் பிடிக்க முடியும்? பொது ஜனங்களுக்கு அம்மாதிரி எண்ணமில்லாவிட்டாலும் மற்றவர்கள் செய்யும் ஆர்ப்பாட்டத்தில் எண்ணமுண்டாய் விடும்போலும்! உண்மையோடு கற்பனா சக்தியையும கலப்பதால் எவ்வளவு விபரீதங்கள் உண்டாகின்றன யென்பதைக கவனிப்பதில்லை. உண்மையே அனேக சந்தர்ப்பங்களில் கட்டுக் கதையைவிட விநோதமாக விருககிற தென்பது பிரத்தியக்ஷம். இங்கிலாந்தில் அரசுபுரிந்த கிராம்வெல் என்னும் போர் வீரனுடைய முகம் பிளவுபட்டும் விகாரமாகவிருக்குமாம். அவன் சித்திரத்தை எழுத ஒரு நிபுணன் வந்தபோது "என் உருவம் எப்படியிருக்கிறதோ அப்படியே எழுதவேண்டும். ஒரு காயத்தையோ நெற்றிக் கோட்டையோ விட்டுவிட்டாயானால் ஒரு பைசாவும் கொடுக்கமாட்டேன்" என்றானாம்.

புத்தகங்களில் எழுதியிருப்பதையே மாற்றிவிடுவதென்றால் முன் காலத்தில் வார்த்தையில் மாத்திரம் இருந்தபோது எவ்வளவு மாறுதல் ஏற்பட்டிருக்கவேண்டும். நமது புராணங்களும் சரித்திரங்களும் இம்மாதிரி கதைகளே. அனேக அற்புதங்களையும் சேர்த்து ஒரு கதையாக எழுதிவிட்டிருக்க வேண்டும். இப்போதுகூட, பாகவதர்கள் புராணங்களை யெடுத்துச் சொல்லும்போது தமக்குத் தோன்றியவாறும், சபையோர்களின் நோக்கத்தை யொத்தும் கதைகளைச் சொல்கிறார்கள்.

சிறு குழந்தைகள் தாம் படிக்கும் கதைகளை உண்மையாகவே கருதுகின்றன. அவைகளுக்கு நீதிகள் கற்பிக்கக் கதை ரூபமாகச் சொல்வது வழக்கம். ஆதிகாலத்திலும், பெரிய விஷயங்களைப் போதிக்க, கதைகளை உண்டுபண்ணியிருக்கவேண்டும். 'பொய் பேசலாகாது' என்றால் ஞாபகமிருக்காது. ஆனால் ஹரிச்சந்திரன் கதையைக் கட்டிச் சொன்னால் எல்லோருக்கும் நினைவிருக்கும். கடவுளிடம் பக்தி யிருந்தால் அவர் கைவிடமாட்டார் என்பதை ஞாபகத்தில் வைக்க மார்க்கண்டேயர் சரித்திரமும் பிரஹல்லாதன் சரித்திரமும் தேவையாயிருக்கின்றன. இச்கதைகளெல்லாம் உண்மையா அல்லவா என்பதை இப்போது கருதச் சமயமல்ல. நீதியைச் சுலபமாகப் புகட்டவே கற்பித்தவைகளாக வைத்துக்கொள்ளலாம். அப்படித்தான் சிற்சில கதைகள் உண்மையாகவே நடந்திருந்தபோதிலும் கதையைச் சொல்பவருடைய சாமர்த்தியத்தினால் பல விஷயங்கள் சேர்க்கப்பட்டு வெளிவரும். ஆகவே, சரித்திரம் புராணம் முதலியவற்றை அப்பட்டம் உணமையெனக் கருதல் தவறு. புத்தகங்களிலிருப்பதனாலேயே இவைகளெல்லாம் உண்மையென்பது சிலருடைய கக்ஷி. இங்கிலாந்தில் இருநூறு வருஷங்களுக்கு முன் சில வஞ்சனைக்காரரிருந்தார்கள். அவர்கள் பண்டைக் காலத்துக் கவிகள் எழுதிய பாட்டுக்களைப்போல் எழுதிவிட்டு, பழைய பாட்டுக்களைக் கண்டுபிடித்தோம் என்று எல்லோரிடமும் சொல்லிவிட்டார்கள். அதைக் கேட்டு அனேகர் ஏமாந்துபோய்விட்டார்கள். அனேக வருஷங்கள் கழிந்த பின்னரே உண்மை விளங்கிற்று. இதுபோல் நமது தேசத்திலும் நடந்திருக்கலாம். இவ்விஷயத்தில் நிபுணர்கள் ஆராய்ச்சி செய்ய வேண்டியது அவசியம்.

தற்காலம் வழங்கி வரும் நாடகங்களில் உடைகளும் சாமான்களுமே உபயோகிக்கப்படுகின்றன என்று சிலர் குறை கூறுகின்றனர். அதாவது நாடகம் எக்காலத்தைக் குறிக்கின்றதோ அக்காலத்தின் நடையுடை பாவனைகளையே அனுசரிக்க வேண்டுமென்பது அவர்களுடைய கொள்கை. ஆனால் எக்காலத்தில் எப்படி யிருந்ததென்று யாருக்குத் தெரியும்? புத்தகங்களைக் கொண்டே இவற்றை நிர்ணயிக்கவேண்டும். அல்லது பூமியில் தோண்டி வெளிப்படுத்தும் சாமான்களைக்கொண்டு கண்டு பிடிக்கலாம். நமது தேசத்தில் அங்கங்கே இம்மாதிரி பூமியைத்தோண்டி ஏதோ வெளிப்படுத்துகிறார்களென்றாலும் இன்னும் எவ்வளவோ பாக்கியிருக்கிறது. ஆகவே, இப்படியிருந்திருக்கவேண்டும், அப்படி யிருந்திருக்கவேண்டும் என்று தமக்குள் ஒருத்தேசஞ் செய்துகொண்டு நாடகத்தை நடத்தவேண்டி யிருக்கிறது. அதே மாதிரி ஐயாயிரம் வருடங்களுக்கு முன் நடந்த விஷயங்களைக்குறித்து இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னிருந்தவர்கள் தங்கள் காலத்திலிருக்கும் விஷயங்களையே அக்காலத்தி லிருந்ததாக கற்பனை செய்து விட்டிருக்கலாம். ஆராய்ச்சி செய்யும் நிபுணர்கள் பழைய புத்தகங்களை யெல்லாம்

படிக்கும்போது ஒவ்வொரு விஷயத்தையும் கூர்ந்து கவனித்துப் பக்ஷபாதமில்லாமல் தம்முடைய தொழிலைச் செய்யவேண்டும். உண்மையே நமக்கு அவசியம். தாக்ஷண்யத்திற்காகவோ, மதக் கொள்கைக்காகவோ நாம் ஒன்றைச் செய்யப்புகின், அநாகரிக மூன்னவர்களென்று பெயர் பெறுவோம். ஏற்கனவே, கீழ்நாட்டு ஜனங்கள் ஒவ்வொன்றையும் பிரமாதப்படுத்திப் பொய்க் கதைகளையுஞ் சேர்த்து புத்தகங்கள் எழுதியிருக்கிறார்களெனப் பெயர் வந்திருக்கிறது. நாம் ஆராய்ச்சி செய்யும்போது சிறிதும் பயமில்லாமல் உண்மையென்று நன்கு புலப்படும் சத்தை மாத்திரம் எடுத்துக்கொண்டு மற்ற குப்பைகளை உதறித் தள்ளவேண்டும்.

உதாரணமாக ஜாதிபேதம் ஆதிகால முதல் வழங்கி வந்ததென்று சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள். சிலர் மத்தியில் ஏற்பட்டதே யொழிய ஆதியிலில்லை யென்கிறார்கள். இவ்விஷயத்தில் ஆராய்ச்சி செய்வதில் தவறில்லை. ஆனால் ஆராய்ச்சி செய்து முடிவிற்கு வந்தாலும், தற்காலத்திற்கு இவ்வேற்றுமைகள் அவசியமா என்று கருதவேண்டும். மெக்காலே (Macaulay) என்னும் பார்லிமெண்டு அங்கத்தினர் ஒருவர் சென்ற நூற்றாண்டிலேயே இவ்விஷயத்தைப்பற்றிச் சொல்லியிருக்கிறார். "ஒரு தலைமுறையில் நல்லதாயிருப்பது அடுத்த தலைமுறையிலும் நல்லதாயிருக்குமென்று ஒருபோதும் சொல்லக்கூடாது. ஒவ்வொரு தலைமுறையிலும் அபிப்பிராய பேதங்கள் உண்டாகின்றன. இன்றைக்கு உண்மையென நினைத்திருந்ததை நாளைய தினம் பொய்ப்பித்துவிடலாம். ஆதலால் நாம் விதிக்கும் சட்டங்களைத் தலைமுறை தலைமுறையாக நம்முடைய பிள்ளைகளும், பேரன்களும், அவர்களுடைய பேரன்களுங்கூட அனுசரிக்க வேண்டுமென்பது மதியீனம்" என்றார். அப்படி ஒரு தலைமுறைக்கும் அடுத்த தலைமுறைக்கும் இவ்வளவு மாறுபாடுகளிருந்தால் இப்போதைக்கும் ஐயாயிரம் வருஷங்களுக்கும் எவ்வளவு வித்தியாசமிருக்கதேண்டும்? அக்காலத்தில் நன்மையானது இக்காலத்தில் தீமையாயிருக்கலாம். இக்காலத்தின் நன்மையென்பது அவர்களுக்குத் தெரியாமலே யிருக்கலாம். அறிவு வளர்கின்றதே யொழிய தேய்வதில்லை.

## சந்தா நேயர்களுக்கு

நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகை ஒவ்வொரு தமிழ் மாத முதல் தேதியிலும் எக்காரணத்தை முன்னிட்டும் நிறுத்தப்படாமல் தபாலில் சேர்க்கப்பட்டு வந்தும் சிலர் சஞ்சிகை கிடைக்கவில்லை என்று எமக்கு அடிக்கடி தெரிவிக்கின்றனர். இந்த நண்பர்கள் அந்த அந்த ஊர் போஸ்டு மாஸ்டருக்கு விஷயந் தெரிவித்தால் சஞ்சிகைகள் ஒழுங்காகக் கிடைத்து வரும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

ப-ர்.

# நாட்டுப்புறத்தான் நாகரிக ஆசை.



# மதுவிலக்கு நீதிகள்.



(நச்சாந்துபட்டி D. ஸ்ரீநிவாஸ ஐயங்கார்)



அதிகக் குடியன் அவதிப் படுவான்
ஆக்கமோ டூக்கமும் நீக்கிடும் மதுவகை
இல்லாள் பொற்றாலியும் இழப்பான் குடியன்
ஈனம் நல்கிடும் மதுபான மொழிமின்
உற்றார் உறவினர் தூற்றுவார் குடியனை
ஊரார் ஏசிட உழலுவான் குடியன்
எட்டியாம் மதுவகை கிட்டியே பாரேல்
ஏழ்மைப் பிணியால் ஆழ்குவான் குடியன்
ஐம்புல னொடுங்கியே நைகுவான் குடியன்
ஒழுக்கம் எய்துமோ இழுக்கமாம் குடியால்
ஓயாக் குடியன் நோய்வாய்ப் படுவான்
ஔவை சொற்றேர்ந்து அகற்றுவாய் குடிதனை
கற்பகத் தருவின் கருக்கொலை புரியீர்
காடியாம் குடிவகை நாடிநீ வருந்தேல்
கிட்டுமோ வாழ்வு மட்டிலாக் குடியால்
கீழ்மை பெருக்குமே பாழுங் குடிவகை
குன்றிய ஆயுளும் குடியால் எய்திடும்
கூறும் மனைவியும் மீறுவாள் குடியனை
கெடுமதி கொள்வோன் நாடுவான் குடியை
கேடுசூழ் மதுவை நாடிநீ வருந்தேல்
கைப்பொரு ளிழந்து கதறுவான் குடியன்
கொலைக்கும் அஞ்சான் கொடியனும் குடியன்
கோரமிகு ரூபியாய்த் தோற்றுவான் குடியன்
சத்தியம் தவறுவான் சலியாக் குடியன்
சாந்தம் பயக்குமோ சாராய மெனுங்குடி
சிவனருள் கிட்டுமோ அவமெனும் குடியால்
சீற்றம் என்கொலோ நாற்றக் குடியால்
சுத்த மௌடிகனாய்ச் சுழலுவான் குடியன்

சூழுமே வினையெலாம் பாழ்மது வதனால்
செல்கதிக் குய்க்குமே அல்லலாம் மதுவகை
சேய்முகம் நோக்கிடான் பேய்நிகர் குடியன்
சையெனத் திரிந்து நைகுவான் குடியன்
சொற்சோர் வெய்திடும் நாற்றக் குடியால்
சோரமும் செய்திட நேருமாம் குடியால்
தலையது வணங்கியே அலைவான் குடியன்
தாயும் நொதித்திட மாய்வான் குடியன்
தின்மையும் பாவமும் வன்குடி வழியதே
தீமைசேர் குடிவகை சிறுமையே நல்கிடும்
துடுக்குத் தனமும் கொடுக்குமாம் குடிவகை
தூண்டின்மீன் போலவே துடிப்பான் குடியன்
தெய்வம் வழிபடான் ஓய்விலாக் குடியன்
தேசம் முன்னேறவே நாசமாம் குடியொழி
தைரியம் குன்றுமே வெறிமிகு குடியால்
தொல்புவி செழித்திடத் தொலைப்பீர் மதுவகை
தோற்பன தொடருவான் நாற்றமிகு குடியன்
நலமெலாம் போக்கும் நாற்றக் குடியொழி
நாடிய பொருளும் கைகூடுமோ குடியால்
நிதியொடு மதியையும் இழப்பான் குடியன்
நீசனே யாகுவான் நித மதுவருந்துவோன்
நுகர்ந்திடும் இன்பம் என்கொலோ குடியில்
நூற்பல தேர்ந்துநீ நோக்கிடேல் குடிதனை
நெக்கு நெக்குருகி நைகுவான் குடியன்
நேரிலா வாழ்வே நண்ணுவன் குடியன்
நொந்திடும் குடிவகை பந்தமாம் ஒழிமின்
நோன்பும் விரதமும் நோக்கிடான் குடியன்
பகரும் குடியால் பலவிதத் துயரே
பால்தனைச் சொரிந்து பரமனருள் பெறு
பிறர் துயர்நோக்கான் பித்தனும் குடியன்
பீர்ஒயின் வகையெலாம் சோர்வே பயக்கும்
புத்தியும் மழுங்கியே புலம்புவான் குடியன்
பூரண வாழ்வும் எய்துமோ குடியால்
பெருமையிலாக் குடிவகை அருநரகாழ்த்தும்
பேரின்பம் வேண்டில் நீ மதுவகை விலக்கு

மையல்கட் கெல்லாம் பழக்கிடேல் குடிதனை
பொறுமையோ டுயர்வும் பொருந்துமோ குடியால்
போலியாம் நண்பரே போற்றுவர் குடியனை
மயக்கம் பயக்கும் மதுவகை மறந்திடு
மானமது போக்கிடும் ஈனமாம் குடியொழி
மிகைபட யேசியே நகைசெய்வார் குடியனை
மீறியே குடியனைத் தூற்றுவார் மக்களும்
முதியோர் வார்த்தையை மதியான் குடியன்
மூர்க்கரே மூகப்பர் மூடனும் குடியனை
மெலிந்துமே குடியன் வலிவெலா மிழப்பான்
மேன்மை யாங்ஙனம் மேவிய குடியால்
மைந்தரும் மதியார் மதியிலாக் குடியனை
மொக்கியே குடியனைத் தாக்குவர் தாணியோர்
மோகம் குடியில் சோகம் விளைக்கும்
வருந்திட வாழ்வும் சுருங்கிடும் குடியால்
வாட்டுங் குடியில் நாட்டங் கொள்ளேல்
விழைந்திடும் குடியால் வீரியம் குன்றிடும்
வீண்கலகம் பல விளைப்பான் குடியன்
உன்மத்த னெனவே உளறுவான் குடியன்
ஊக்கமாய்க் குடிதனை நீக்குவாய் மதியால்
ஒற்றுமை கொண்டு அகற்றுவீர் குடிதனை
ஓட்டுவீர் குடிதனை நாட்டைவிட் டகலவே
போதம் நல்கிடு நம்போதினி நத்துவீர்
வாழ்க நம்போதினி வையமிசை யோங்கியே
வாழ்க நம்சந்தா நேயரும் வாழ்கவே.

---

ரயில வண்டியில் ஜன்னல்கள் திறந்திருந்தன.

முதற் பிரயாணி:—“அந்த ஜன்னலை மூடிவிடவேணும். இல்லையானால் குளிர்காற்றுப்பட்டு நான் இறந்துவிடுவேன்.”

2—வது பிரயாணி:—“அந்த ஜன்னலை மூடிவிட்டால் நான் மூச்சுத் திணறி இறந்துவிடுவேன்.”

3—வது பிரயாணி:—“நான் மத்தியஸ்தம் செய்கிறேன்—சும்மா இருங்கள். ஜன்னலை முதலில் மூடிவிடுகிறேன். அப்போது நீ இறந்துவிடுவாய். பிறகு ஜன்னலைத் திறந்துவிடுகிறேன். அவர் செத்துப்போவார். நீங்கள் இரண்டுபேரும் போய்விட்டால் மீதியுள்ள பிரயாணிகள் எல்லோரும் சுகமாய் ஊர்கட்குப் போய்ச் சேர்வார்கள்.




## "விவரம் கேட்டல்"



டாக்டர் கால் வீக்கத்திற்கு மேற் பூச்சுப் பூச மருந்து கொடுத்திருந்தார். மறுநாள் மருந்து வாங்கிக் கொண்டு போனவன் உபயோகிக்கும் விவரம் கேட்க வந்தான்.

நாட்டுப்புறத்தான் :—"மூழங்கால் வீக்கத்திற்குத் தாங்கள் கொடுத்த "டிங்ச்சர்" என்ற மருந்தை என் அண்ணனுக்கு நேற்று மூன்று தடவையாகக் கொடுத்தேன். எப்படியோ கஷ்டப்பட்டுக் குடித்துவிட்டான். ஆனால் அது வெகு "காட்டாக" இருந்ததாம். ரொட்டியிலாவது தொட்டுச் சாப்பிடலாமா என்ற விவரம் உங்களிடம் கேட்டுக் கொண்டுவரச் சொன்னான்."

***

## "குட்டு வெளிப்பட்டது."

ஜால வித்தைக்காரன்:—"நான் தங்கள் கடிகாரத்தைச் சுக்கல் சுக்கலாக நொறுக்கி இந்தப் பெட்டிக்குள் போட்டதை நேரில் பார்த்தீர்களே—இப்போது அது டிக் டிக் என்று ஓடிக்கொண்டிருக்கும் சப்தம் கேட்கிறதா?"



மற்றவர்:—"கேட்கிறது! ஆனால் நான் தங்களிடம் கொடுத்த கடியாரத்தில் ஸ்பிரிங் சக்கரங்களே இல்லை. அப்படியிருக்க அது ஓடும் சப்தம் எப்படிக் கேட்கிறது என்பது எனக்குப் பெரிய ஆச்சரியமாயிருக்கிறது."

## "சந்தேகம் வேண்டாம்"



புதிதாய் ஆகாயவிமானத்தில் பிரயாணம் செய்து பார்க்க விரும்பிய ஸ்திரீ கேட்கிருள்:—"உங்களைப் பத்திரமாகத் திரும்பவும் பூமியில் கொண்டுவந்து சேர்த்துவிடுவீர்கள் அல்லவா?"

ஆகாயவிமானி :—"அம்மா! அதைப்பற்றி உங்களுக்கு என்ன வேணும் சந்தேகம் வேண்டாம். நான் எந்தக் காலத்திலும்—எக்காரணங் கொண்டும் பிரயாணிகளை ஆகாயத்தில் விட்டுவிடுவதே இல்லை."

***

மாணவன்:—"சார்! இந்த நான்கு அணுக்களையும் வைத்துக் கொள்ளுங்கள்."

வாத்தியார்:—"எதற்காக?"

மாணவன்:—"அவசரமாய்க் கூட்டியதால் கணக்கில் நான்கணுக் குறைந்துவிட்டது. இதை வைத்துக்கொண்டு "ரைட்" போடுங்கள்.

***

## " தாராளம் "



டாக்டர் :—(எவ்வளவு சார்ஜ் செய்வது என்று திகைத்து) "போனதடவை நீங்கள் அந்த டாக்டருக்கு எவ்வளவு கொடுத்தீர்கள்?"

நோயாளி:—' அவருக்கா? ஒருமாதம் மருந்து கொடுத்ததற்கு மூன்று ரூபாய் கொடுத்தேன்."

டாக்டர்:—"இது மிகவும் ஆச்சரியமே!"

நோயாளி:—"என்ன செய்வது? கொடுத்துத் தீரவேண்டுமே என்று முணு முணுத்துக் கொண்டே கொடுத்தேன்."

***

வைத்தியர்:—"நீ சுருட்டுப் பிடிக்கக்கூடாது, சினிமா---நாடகங்கட்குப் போகக்கூடாது! தெரிந்ததா?"

நோயாளி:—"நான் என்ன செய்யவேணும் என்கிறீர்கள்?"

வைத்தியர்:—"அவைகளை நிறுத்துவதினுல் மிச்சமாகும் பணத்தையும் சேர்த்து எனக்குப் பீஸ் கொடுத்துவிடு."



### "பெண்களின் இரகசியம்"

"தான் ஒருவரிடமும் சொல்லக் கூடாதென்று மங்களம் தன்னிடம் சொன்னதாக மரகதம் என்னிடம் சொல்லியதும், நான் ஒருவரிடமும் சொல்லக் கூடாதென்று அவள கேட்டுக்கொண்டது மான விஷயத்தை நான், நீ ஒருவரிடமும் சொல்லக் கூடாதென்று உன்னிடம் சொல்ல, நீ அதைக் கோமதியிடம் சொல்லி, அவள் அதை ஒருவருக்கும் சொல்லக் கூடாதென்று தன் மருமகள் சாவித்திரியிடம் சொல்ல, அவள் அதைத் தன் தங்கை ஜெயலக்ஷிமியிடம் சொல்லி, ஜெயலக்ஷிமி இன்று காலே என்னிடம் வந்து அதை அதிக இரகசிய மாகச் சொல்கிருளே. இது உனக்கு நியாயமா?"

மற்றவள்:—"அது என்ன இழவோம்மா, என்னிடம் நேற்று சாயங் காலமே இந்த ரகஸிய விஷயத்தைப்பற்றிப் பத்து பன்னிரண்டு பேர் வந்து கேட்டார்கள். அவர்களுக்கு யார்தான் சொன்ஞர்களோ தெரியவில்லே."

***

பிச்சைக்காரன்:—"ஐயா நான் க்ஷவரம் செய்துகொள்ள வேண்டும்—எட்டணுக் கொடுங்கள்."

பெரிய மனிதர்;—"எட்டணு எதற்காக? இரண்டணு அல்லது மூன் றணுக் கொடுத்தால் செய்வார்களே!"

பிச்சைக்காரன்:—"நான் க்ஷவரம் செய்துகொண்டு மூன்று மாதம் ஆகி றது. அதனுல் அதிகமாய்க் கேட்பார்கள்.

***

### "சமர்த்து"

ஒரு ரயில்வே கார்டானவர் தமது மாமனுருக்கு ஒரு தனி கம்பார்ட்மெண்ட கொடுத்து, அதைப் பூட்டி விட்டார். வேருெரு பிரயாணி எவ்வளவோ வழக்குப் பேசியும் கார்டு அவருக்கு இடங் கொடாமலே அனுப்பி விட்டார்.



மாமனுர்:—"என்ன மாப்பிள்ளே! அந்தத் தடியனே இவ்வளவு லேசில அனுப்பி விட்டீர்களே, ஏன்?" கார்டு (மருமகன்):—"உங்களுக்குப் பைத்தியம் என்று சொன்னேன்' அவன் ஒரே ஓட்டமாய் ஓடி விட்டான்.

### "வரவேற்பு"

எலெக்ட்ரிக்ட்ரெயினில் வரும் தன் பெண்சாதியைச் சந்திக்க விரைந்தோடும் கணவன்.

"ஐயோ! இழவு வண்டி ஒரு நிமிஷங்கூட நில்லாதே. அவளோ ஒரு நிமிஷம் தாமதமானலும் குரங்காட்டம் ஆட்டி விடுவாளே"



* * *

வேலைக்காரன்:—"உங்களைத் தூக்கத்தினின்றும் எப்பொழுது எழுப்பச் சொல்லுகிறீர்கள்?

எஜமானர்:—"நான் மணி அடிக்கிறேன். அப்பொழுது வந்து எழுப்பு."

* * *



### "மக்கட் செல்வம்"

"போன் போற்றிற் பெரும் பேறு இல்லை" இந்த மாதிரியான செல்லக்குட்டி தவம் செய்தாலும் கிடைக்குமா?

* * *

கடன் கொடுத்தவர்:—அப்பா! நான் உனக்குக் கொடுத்த பணத்தைத் திருப்பிக் கொடுக்கும்படி இதுவரை நான்குமுறை கேட்டாடாயிற்று. இதைச் சிறிது கவனி.

வாங்கியவர்:—என்ன பிரமாதம்! நான்கு முறைதானே கேட்டீர். நான் எத்தனை முறை அலைந்த பிற்பாடு நீர் அதைக் கொடுத்தீர் என்பது உமக்கு ஞாபகமில்லை போலும்;

* * *

எஜமானர்:—"என்ன அப்பா! வேலை செய்துகொண்டே தூங்கி விழுகிறாய்?"

குமாஸ்தா:—"எங்கள் பையன் இரவு முழுதும் அழுதுகொண்டே இருந்தபடியால், எனக்கு இரவில் தூக்கம் பிடிக்கவில்லை."

எஜமானர்:—"அவனை இங்கேயும் அழைத்துக்கொண்டு வாராமல் இருந்து விட்டாயே! அவன் வந்திருந்தால் இங்கும் தூங்காமலே இருக்கலாம் அல்லவா?"

## "டைம்"

ஒரு முதலியார் ஒரு செட்டியாருக்குக் கடன் கொடுக்க வேண்டும். வெகு காளாய் தப்பித்துக் கொண்டே இருந் தார். ஒருநாள் இரண்டு பேரும் அகஸ் மாத்தாய்ச் சந்திக்க நேர்ந்தது.

முதலியார்:—(அவசரமாகப் போகிற வர்போல் பாவனை காட்டி) "செட்டி யாரே டைம் என்ன ?"

செட்டியார்:—('வாட்சை எடுத்துப் பார்த்துவிட்டு) தாங்கள் கடனைத் திருப் பிக் கொடுக்கவேண்டிய டைம் ஆகி விட்டது.'

"அப்படியா! ஐயையோ! கொஞ்சம் பொறுங்கள்" என்று ஓட்டம் எடுக்கிறார்.

***

பல் வைத்தியர்:—"அழாதே! நோய்ப்பல் வெளியே வந்துவிட்டதல் லவா?

பையன்:—"அது சரிதான். நான் இன்றைக்குப் பள்ளிக்கூடம் போக வேணுமே!"

***

போலீஸ்:—"இவ்வளவு வேகமாய்க் காரை ஓட்டுகிறாயே, ஏன்?"

டிரைவர்:—"ஆபத்து உண்டாவதற்கு முன்பே வீட்டுக்குப் போய்விட லாம் என்று வேகமாய் ஓட்டுகிறேன்."

***

வைத்தியர்:—"உனது நோய்க்கு எந்த டாக்டரிடமாவது இதுவரை யோசனை கேட்டாயா?"

நோயாளி:—"என் ஸ்நேகிதன் ஒருவன் மெடிக்கல் ஸ்கூலில் வாசிக்கி றான்—அவனிடத்தில் கேட்டேன்."

வைத்தியர்:—"வெகு ஒழுங்கு. மாணவனுக்கு என்ன தெரியும். அவன் சொன்ன முட்டாள் யோசனை என்ன?"

நோயாளி:—"உங்களிடம் போகச் சொன்னான்."

***

குப்பன்:—"என்னுடையது பட்டுக் குடை. ரயில்வே ஸ்டேஷனில் தவறிவிட்டது.

சுப்பன்:—"ஐயோ பாவம்! உனக்கு மிகவும் கஷ்டமாயிருக்குமே."

குப்பன்:—அது வாஸ்தவந்தான். ஆனால் ஒருவகையில் மனம் அமைதி யுடனிருக்கிறது."

"எதனால்?"

"அந்தக் குடை என்னுடையதல்ல."

# சிறுமணித் திரட்டு.

புகழ்பெற்ற சினிமா நடிகரான சார்லி சாப்ளின் தமது பாதரக்ஷைகளைப் பதினாயிரம் பொன்னுக்கு இன்ஷியூர் செய்திருக்கிறார். அவை ஏழு அல்லது எட்டு ரூபாய்தான் பெறுமாம்.

*　　　*　　　*

சென்னை "இந்தியா" தினசரி ஆசிரியர் ஜனக சங்கர கண்ணப்பருக்கும், நாகர் கோவில் மிஸ்டர் தம்புசாமியின் மகள் ஸ்ரீமதி. மனோகரம் அவர்கட்கும் சென்னை ராயப்பேட்டையில் சென்ற மாதம் கிறிஸ்தவ முறையில் திருமணம் நடைபெற்றது.

*　　　*　　　*

பாரிஸ் ரயில்வே ஸ்டேஷனில் தினசரி சமாசாரங்களைப் பிரயாணிகட்குத் தெரிவிப்பதற்கு ஒரு சினிமா நிறுவப்பட்டிருக்கிறதாம்.

*　　　*　　　*

எருசலத்திற் கருகில் சுமார் மூப்பத்தையாயிரம் ஆண்டுகட்கு முன்னிருந்த பிராணிகளின் எலும்புக்கூடுகள் அகப்பட்டிருக்கின்றனவாம். ஆந்திர நாட்டில் உள்ள வாரங்கல் என்ற ஊரில் பன்னிரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு ஜைன விக்கிரகம் அகப்பட்டிருக்கின்றதாம்.

*　　　*　　　*

லண்டன் நகர சபையார் தங்கள் நகரிலுள்ள பாதாள ரயில்வேயை இன்னும் ஐந்து மைலுக்கு அதிகப்படுத்தப் போகின்றனராம்.

*　　　*　　　*

ஜனங்கள் ஊசியின் மூலம் தங்கள் அவயவங்களில் பச்சை குத்திக்கொள்ளுவதற்குப் பதிலாக, வேண்டிய வஸ்துவைத் தங்கள் அவயவங்களிலேயே புகைப்படம் எடுத்துக்கொள்ளும்படியான ஒரு காமிராவை ஓர் ஐரோப்பிய நிபுணர் கண்டுபிடித்திருக்கிறாராம். எடுக்கப்பட்ட படத்தை ஒருவித திராவகத்தால் அழித்தும் விடலாம் என்று தெரிகிறது.

*　　　*　　　*

அசீரியா நாட்டில் கி. மு. 15-ம் நூற்றாண்டில் வழங்கிவந்த மித்தனி பாஷையும், நமது தமிழ் மொழியும் தொடர்புடையன என்று ஆராய்ச்சி அறிஞர் கூறுகின்றனர்.

*　　　*　　　*

பிரான்ஸ் தேசத்தில் ஜார்ஜ் ரெமோன் என்ற கனவான் 584 பவுண்டு கனமுள்ளவராயிருக்கிறாராம். அவரது இடையின் சுற்றளவு 9 அடி 2 அங்குலமாம்.

*　　　*　　　*

பிரேசில் நாட்டில் பத்துக் கோடி கொக்கோ மரங்கள் இருக்கின்றனவாம். காபி உற்பத்தியில் அது உலகத்திலேயே முதல் நாடாகவும் கொக்கோ உற்பத்தியில் இரண்டாவது நாடாகவும் விளங்குகின்றது.

*　　　*　　　*

ஆலி இப்ராகீம் என்பவர் அலெக்ஜாந்திரியாவில் ஒரு சிங்காரத் தோட்டத்திற்குச் சென்று ஒரு மர நிழலில் அயர்ந்து உறங்கிவிட்டார். அவர் உறங்கும்பொழுது ஒரு திருடன் அவரது வாயைத் திறந்து வாயிலிருந்த 18 தங்கப் பற்களையும் அடித்துக்கொண்டு போய்விட்டானாம்.




பிரஞ்சு மாதுக்கு நேர்ந்த கதி:—பிரான்ஸ் தேசத்தைச் சேர்ந்த லியன்ஸ் என்னுமிடத்தில் மாடம் மாத்தியாஸ் என்னும் மாது ஒரு வீட்டிலிருந்து டெலிபோன் மூலமாகத் தன் கணவனுடன் பேசிக்கொண்டிருந்தபோது திடீரென்று அவ்வீடு இடிந்து விழுந்துவிட்டதால் அம்மாது அதன் அடியில் அகப்பட்டுக்கொண்டாள். அவள் இறந்துவிட்டாளென்றே அவளது கணவன் உள்பட அனைவரும் கருதினார்கள். ஆனால் 18-மணி நேரத்துக்குப் பின்னர், 'நான் இன்னும் உயிருடன் இருக்கிறேன். என் கணவன் எங்கே என்று கத்தினார்' உடனே இடிந்துபோன பாகங்களை யெல்லாம் அப்புறப்படுத்திப் பார்த்ததில் அம்மாது சிறிதும் பாதகமடையாமல் உயிருடன் வெளிவந்தாள்.

***

34 அங்குல மீசையை யுடையவர்:—சென்ற ஆண்டு மிஸ். ஆமிசான்சன் லண்டனிலிருந்து ஜப்பானிலுள்ள டோக்கியோவுக்கு ஆகாய விமானத்தில் சென்றபோது அம்மாதைப் பாராட்டி முத்தமிட்ட நகர்த்தர் இருபது அங்குல நீளமுள்ள மீசையை வைத்திருந்தார். அவரே உலகில் அதிக நீண்ட மீசையை யுடையவர் என்று பெருமை பாராட்டிக்கொண்டார். ஆனால் அவரையும் தோற்கடிக்கக் கூடியவர் இந்தியாவில் இருக்கிறார். அவரது பெயர் தேசூர். அவர் லாதி சமஸ்தானத்திலுள்ள புராக்கியா என்னுமிடத்தில் அனுமார் கோயிலில் வேலை பார்த்து வருகிறார். அவருடைய மீசை 34 அங்குல நீளமுடையது.

***

குழந்தையைப் பரிசளித்த மாது:—வார்ஸா மாதாகோயிலில் சமீபத்தில் ஒரு விவாகம் நடைபெற்றது. விவாகம் முடிந்த பின்னர் தம்பதிகள் பலி பீடத்தை விட்டுத் திரும்பியபோது ஒரு மாது அவர்கள் முன் மூடிய கூடை ஒன்றை வைத்துவிட்டுப் போனாள். மணமகள் அக்கூடையைத் திறந்து பார்க்கையில் அதில் ஒரு அழகான குழந்தை இருந்தது. அக்குழந்தையின் அருகில் ஒரு கடிதமும் இருந்தது. அதில், 'என் குழந்தையை ஜாக்கிரதையாக அன்புடன் வளர்த்துக்கொள்ளுங்கள். அதன் தாயாகிய நான் பசியால் இறக்கவேண்டியவளாய் இருக்கிறேன்' என்று எழுதப்பட்டிருந்தது.

***

சுமத்திரா மாதர் மூடநம்பிக்கை:—சுமத்ரா தீவைச் சேர்ந்த ஒரு பாகத்தில் சாகுபடி செய்வதற்காக மாதர்கள் நெல் தானியங்களை விதைக்கும்போது, பயிர்கள் தங்கள் கூந்தலைப்போல நீண்டு வளரவேண்டு மென்னும் நம்பிக்கையுடன் தலைமயிரை அவிழ்த்துத் தொங்கவிட்டுக்கொண்டு விதைகளை விதைக்கிறார்களாம்.

# ஆசிரியர் குறிப்புக்கள்.

## காந்தியடிகள் "பிராமணரா வைசியரா"

லண்டனில் வெளியாகும் "டெயிலி மெயில்" பத்திரிகை மிகவும் பிரசித்தி பெற்ற பத்திரிகைகளுள் ஒன்று. அதன் 1932-ம் ஆண்டுப் புத்தகத்தில் "இந்தியாவின் முக்கியமான ஆண்டு" என்ற தலைப்பில், கீழ்க்கண்ட விவரம் காணப்படுகிறது:—

"லண்டன் வட்டமேஜை மகாநாடு மீண்டும் செப்டம்பரில் கூடியது. பம்பாய் மாகாணத்தைச் சேர்ந்த பிராமண வக்கீலாகிய காந்தி அதில் கலந்து கொண்டார். இவர் ஒரு துறவியாகவும் சாதுவாகவும், இந்துக்களின் தலைவராகவும் இருப்பதால் அதிகச் செல்வாக்குப் பெற்றிருக்கிறார்."

அதே புத்தகத்தில் இன்னொரு விடத்தில் காணப்படும் விவரம் வருமாறு:—

"மோகனதாஸ் கரம் சந்திரகாந்தி பிரிட்டிஷ் ஆட்சிக்கு விரோதமான புரட்சி செய்யும் கூட்டத்தலைவர்.......................................................... மகாத்மா காந்தி என்று இவர் அழைக்கப்பட்டு வந்த போதிலும் புரோகிதர் வம்சத்தைச் சேர்ந்தவர் அல்லர். வணிக ஜாதியைச் சேர்ந்தவர்."

இச்செய்தியைக் காணும் எல்லோரும் சிரிக்காமல் இருக்கமாட்டார்கள் என்று நம்புகின்றோம். ஒரே புத்தகத்தில் காந்தி ஓரிடத்தில் பிராமணர் ஆகிறார். மற்றோரிடத்தில் வணிகர் ஆகிவிடுகிறார். "டெய்லி மெய்லி"ன் திருஷ்டியில் புரட்சித் தலைவராகவும் தோன்றுகிறார். இதை நோக்கும்போது இந்தியாவைப்பற்றியும் இந்தியத் தலைவர்களைப்பற்றியும், இவ்விடத்திய நிலைமையைப்பற்றியும் பிரபல பிரிட்டிஷ் பத்திரிகைகளுங்கூட உண்மையை அறியச் சிரத்தை காட்டாமல் எவ்வளவு அலக்ஷிய புத்திகாட்டுகின்றன என்பது இனிது விளங்கும்.

## கோவில் நிர்மாணத்துக்கு லைசென்ஸ்

கோவில்கள் வகுப்புக் கலகங்கட்குக் காரணங்களாக விளங்குகின்றபடியால் கோவில்கள் அல்லது மசூதிகள் புதிதாகப் பம்பாய் நகர எல்லைக்குள் நிர்மாணிப்பதா யிருந்தால் கார்ப்பொரேஷனிலிருந்து லைசென்ஸ் பெறவேண்டும் என்ற கருத் தடங்கிய தீர்மானம் ஒன்றை பம்பாய் கார்ப்பொரேஷன் சபையில் அங்கத்தினர்கள் நிறைவேற்றி யிருக்கின்றனர். கோவில்கள் அல்லது மசூதிகள் நிர்மாணிக்கப்போகும் இடங்களைப் பார்வையிட்டு, வகுப்புச் சண்டைகட்கு இடம் இல்லை என்று தெரிந்தால் லைசெனஸ் கொடுக்கப்படும். இத் தீர்மானத்தை நிறைவேற்றிய பம்பாய் கார்ப்பொரேஷன் அங்கத்தினர்களை நாம் பாராட்டுகின்றோம். இதைவிட ஏற்கனவே கலகங்கட்குக் காரணங்களாய் விளங்கும் கோவில்கள் விஷயத்திலும், மசூதிகள் விஷயத்திலும் ஏதேனும் ஒரு ஏற்பாடு செய்திருந்தால் ஷை அங்கத்தினர்களை மிக மிகப் பாராட்டுவோம் என்பதில் ஐயம் இல்லை. இன்னும் இத்தகைய தைரியம் வருவதற்குக் காலம் வரவில்லை போலும்!

### பம்பாய் வகுப்புக் கலகம்

சென்ற மாதம் நடைபெற்ற மொகரம் பண்டிகையின்போது பம்பாயில் தோன்றிய வகுப்புப் பேய் நூற்றுக் கணக்கானவர்களின் உயிர்களை உறிஞ்சியதோடு ஆயிரக் கணக்கானவர்கட்குக் கொடுந் துன்பமும் உண்டாக்கிவிட்டது. சுதந்தரக் கிளர்ச்சி நடைபெற்றுவரும் இக்காலத்தில் இத்தகைய வகுப்புப் பேய் தலைவிரித்தாடல் வருந்தத் தக்கதாகும். சில முஸ்லிம் இளைஞர்கள் தண்ணீர்ப் பந்தல் வைப்பதற்கு என்று ஒரு இந்துவின் கடையில் யாசகம் கேட்டார்களாம். அவர் இல்லை என்று மறுக்கவே முஸ்லிம் இளைஞர்கள் முரட்டுத்தனமாக நடந்துகொண்டார்களாம். இந்துக் கடைக்காரர் தம்முடைய ஆட்களைவிட்டு அவர்களை அடித்துத் துரத்தினராம். இதுதான் பம்பாய் நகரையே அல்லோல கல்லோலப் படுத்திவிட்டது. எங்கும் கொள்ளை! எங்கும் தீயிடல்! எங்கும் அடிதடி! எங்கும் கொலை! நகரமே ரணகள மாகிவிட்டது! இவ்வளவுக்கும் காரணம் என்ன? வகுப்புப் பேய்! இப் பேய்க்கு இன்னும் இடங் கொடுத்துக்கொண் டிருப்பதா? இந்து—முஸ்லிம் தலைவர்களே! வெட்கம்! வெட்கம்!!

### திரு. சத்தியமூர்த்தியின் ஆசை

சென்றமாதம் திரு. சத்தியமூர்த்தி ஐயர் அவர்கள் வேலூர்ச் சிறையிலிருந்து காந்தியடிகட்கு ஒரு விசித்திரக் கடிதம் எழுதியிருந்ததாகப் பத்திரிகைகளில் வெளியாயிற்று. அக் கடிதத்தில், "சட்டமறுப்பு இயக்கம் தேவைப்பட்டாலன்றித் தாங்கள் ஒரு நிமிஷம்கூட நடத்தமாட்டீர்கள் என்பது எனக்குத் தெரியும். சென்ற வட்டமேஜை மகாநாட்டில் தாங்களும் ஒத்துகொண்டதுபோல் தற்காலம் மாகாண சுயஆட்சி கொடுப்பதாகக் கூறுகிறபடியால் நாம் அதை மனப்பூர்வமாக ஆதரிக்கவேண்டிய தவசியம். இது என் அபிப்பிராயம் மட்டும் அல்ல. வேலூர் சிறையிலுள்ள தலைவர்களின் அபிப்பிராயமும் இதுதான்" என்ற பொருள்படக் குறிப்பிட் டிருந்ததாக அறிகிறோம். ஆனால் அடுத்த சின்னாட்களில் அச் சிறையிலிருந்து வெளிவந்த ஒரு தேசபக்தர் அக்கடிதத்தில் கண்ட விஷயங்களெல்லாம திரு. சத்தியமூர்த்தியின் சொந்தச் சரக்கு—அதற்கும் மற்றவர்கட்கும் சம்பந்தமில்லை என்று தெரிவித்துவிட்டார். திரு. சத்தியமூர்த்திகுச் சிறை வாழ்க்கை பிடிக்கவில்லை என்றால் அதற்கு வேறு உபாயங்கள் இல்லையா? வீணில் மகாத்மாவிற்குப் பொய்யும் புளுகும் கலந்து என் யோசனைகூற முந்த வேண்டும்?

### பம்பாய் இந்துக்களின் சமதர்ம வேண்டுகோள்

நமது நாட்டில் இப்பொழுது தாழ்த்தப்பட்ட மக்கட்குச் சமத்துவம் வழங்கவேண்டும் என்ற உணர்ச்சி நாளுக்குநாள் வலிமையடைந்து வருகிறது. சென்னை மாகாணத்திலும் பம்பாய் மாகாணத்திலும் தாழ்த்தப்பட்ட வகுப்பாரின் சார்பில் கோவில் நுழைவுக் கிளர்ச்சியும் ஒருவாறு நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. எனினும் அது இன்னும் எதிர்பார்த்த அளவுக்குப் பயன் அளிக்கவில்லை என்றே கூறவேண்டும். சென்ற மாதம் பம்பாய் இந்துப் பிரமுகர்கள் ஆயிரம்பேர் கையொப்பமிட்டு கோவில்களின் நிர்வாகஸ்தர்கட்கும் மற்றவர்கட்கும் தாழ்த்தப்பட்ட சகோதரர்கட்குக் கோவில்களைத் திறந்துவிடுமாறு ஒரு வேண்டுகோள் வெளியிட்டிருக்கின்றனர்.

முன்னர் வேண்டியது அரசியல் சீர்திருத்தமா சமூகச் சீர்திருத்தமா என்ற வீண் விவாதத்தில் இறங்காமல் தாழ்த்தப்பட்ட மக்கள் திறத்தில் எல்லாரும் கருணைகாட்டவேண்டும். சாதி சமய வேற்றுமைகள் ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக வேரூன்றியிருக்கும் வழக்கங்களானாலும் பொதுநலத் தலைவர்களும் ஏனைய முக்கியஸ்தர்களும் இவற்றை ஒழிக்க உண்மை உணர்ச்சியுடன் முனைந்து முயன்றால் வெகு விரைவில் நற்பயன் காணலாம் என்பது எமது நம்பிக்கை. இம்முறையில் பம்பாய் பிரமுகர்களின் வேண்டுகோள் தக்க பலன் அளிக்கும் என்றே நம்புகின்றோம். நமது பொதுநலப் பிரியர்களும் வாய் அநுதாப அளவில்—மேடைப் பிரசங்க அளவில் நில்லாமல் பொதுஜன அநுதாபத்தையும் உணர்ச்சியையும் நன்முறையில்—உருவான வழியில் திரட்ட முன் வருவார்களாக.

## பவாநந்தரின் பிரிவு

திவான்பகதூர். எஸ். பவாநந்தம் பிள்ளை அவர்கள் சென்ற மாதம் நீலகிரியில் காலமானார் என்ற செய்தி அறிந்து பெரிதும் திடுக்குற்றோம். கோடை வெம்மைக் கஞ்சி நீலமலைக்குச் சுகவாசம் செய்யச் சென்ற தமிழ்ப் பெருந்தகை இவ்வளவு விரைவில் உலக வாழ்வைத் துறப்பார் என்று நாம் எதிர்பார்க்கவில்லை. அறிஞர் பவாநந்தம் பிள்ளை 1868-ம் ஆண்டில் பிறந்தார். சென்னை வெஸ்லிக் கல்லூரியிலும் கோவைக் கல்லூரியிலும் கல்வி பயின்றார். என்றும் தமிழ் மொழிமாட்டுத் தனி ஆர்வம் காட்டிவந்தார். திவான் பகதூர். பிள்ளை அவர்கள் 1918-முதல் 1924-ம் ஆண்டுவரை சென்னை போலீஸ் உதவிக் கமிஷனர் உத்தியோகத்தைத திறமையுடன் நிர்வகித்தார். 1925-ல் சென்னை ஷெரிப்பாக விளங்கினர். இவரது அரிய பெரிய பொது ஜன ஊழியத்தை மதித்து அரசாங்கத்தார் ஒரு ஜாகீருமவழங்கினர். திவான் பகதூர் எஸ். பவாநந்தம் பிள்ளை அவர்களின் ஆன்மா சாந்தி அடைவதாக.

## விபினசந்திர பாலரின் பிரிவு

பழம் பெரும் தேசபக்தர்—அரசியல் அறிஞர்—உணர்ச்சி யூட்டும் நாவலர்—வங்கச் சிங்கம் விபினசந்திரபாலர் சென்ற மாதம் இவ்வுலக வாழ்வை நீத்தார் என்ற செய்தி அறிந்து பெரிதும் வருந்துகின்றோம். ஸ்ரீமான் பாலர் சில காலமாக காங்கிரஸுக்கும், காந்தியடிகட்கும் விரோதமாகக் காலங்கழித்து வந்தாராயினும், இவர் முன்னர் இந்திய மக்கட்குச் செய்துள்ள திருத்தொண்டு என்றும் மறக்கற்பாலதன்று. வங்காளப் பிரிவினையின்போது இவர் செய்த வீரமுழக்கம் உலகெங்கும் கேட்டது. ஆதியில் இந்திய மக்களின் விழிப்புக்கும் தேசீய எழுச்சிக்கும் ஸ்ரீமான். விபினசந்திர பாலரின் வீரமும் உணர்ச்சியும் ததும்பிய சொற்பொழிவுகளே முதற்பெருங் காரணம என்னும் உண்மையை எவரும் மறுக்கத் துணியார். இவர் இமயம் முதல் குமரிவரை சுற்றுப்பிரயாணம் செய்து மக்களைத் தட்டி எழுப்பினர். சிறை செல்வது அரிதாயிருந்த அக்காலத்திலே இவர் நாட்டு நலங்கருதிச் சிறைசென்றார்—பல கஷ்ட நஷ்டங்களை அடைந்தார். இவர் இந்திய சட்டசபை அங்கத்தினராகவும் இருந்தார். இவர் இறக்கும்போது வயது 76. ஸ்ரீமான். விபினசந்திர பாலரின் ஆன்மா சாந்தி அடைவதாக.

---




# நீல அறையின் மர்மம்.

(எஸ். எஸ். வாஸன்)

(879-ம் பக்கத் தொடர்ச்சி.)

சில நிமிஷங்களுக்கு நானும் அவரும் முன்னும் பின்னுமாகவும் மேலும் மிக ஆபத்தாகச் சண்டை போடலாம். எனக்கிருந்த கோபத்திற்கும் நானிருந்த நிலைமைக்கும் அவரை மாடிப்படி வழியாகவே மேலிருந்தபடிக் கீழே யுருட்டித்தள்ளி யிருப்பேன். ஆனால் நான் எவ்வித மாவது அவரைத் தோற்கடிப்பதற்குள் அவர் தன் கையிலிருந்த ஆயுதத்தை என் கழுத்து முன் நீட்டி விட்டார். அடுத்த நிமிஷம் 'படீர்' என்ற சப்தம் கேட்டது. அதிர்ஷ்டவசமாகத் துப்பாக்கியின் குண்டு என் கன்னத்தைத் தேய்த்துக்கொண்டு அப்பால் சென்று விட்டது.

எனக்கு யாதொரு காயமும் ஏற்படவில்லை. ஆனால் என்னைச் சுட்டுத் தீர்த்துவிட வேண்டுமென்று அவர் எண்ணி யிருந்தபடியால், உடனே நான் அவரது கழுத்தில் கையை வைத்துத் தலையைத் திருகிய விதமாய் அவர் கையிலிருந்த ஆயுதத்தைப் பிடுங்கிக்கொண்டு விட்டேன். பிறகு அவரை யொரே தள்ளாய்க் கீழே தள்ளிவிட்டுக் கதவின் பக்கம் பாய்ந்துக் கைப்பிடி யைத் திருப்பினேன்; பிரயோஜனமில்லை. கதவு பூட்டப்பட்டிருந்தது. அவ்வளவுதான், அந்த சமயத்தில் நான் வேறொன்றும் யோசிக்கவில்லை. வெகு தூரம் கதவுக்கு எதிராகப் பின்னால் நடந்து பிறகு வேகமாக ஓடிக் கதவின் மேல் என் முழு பலத்தையும் வைத்துத்தாக்கினேன். கதவு படார் என்று திறந்து கொண்டது. சாஷ்டாங்கமாய் நமஸ்காரம் செய்பவனைப்போல் பொத்தென்று அறைக்குள் விழுந்தேன்.

அந்த அறைக்குள் மினுக்கு மினுக்கு என்று ஒரு விளக்கு எரிந்து கொண்டிருந்தது. நான் விழுந்த விடத்தினின்றும் எழுந்து நிரம்ப ஆவலுடனும் மனப் பதைபதைப்புடனும் ஆங்கிருந்த கட்டிலினருகில் சென்றேன்.

மௌனமாகவும் அசைவில்லாமலும் என் மனைவி அங்கு படுத்திருந்தாள். சுவற்றைப் பார்த்தவண்ணம் தனது இரண்டு கைகளின் மேல் தலையை வைத்த வண்ணம் அவள் படுத்துக்கொண்டிருப்பதானது அறியாத குழந்தைகள் அறியாமல், தூங்குவதுபோ லிருந்தது. இதனால் என் மனைவியை நான் சரியாய்ப்பார்க்க முடியவில்லை..................

என் உயிரை வாங்கி விட்டாலும் வாங்கி விடலாம் நான் இவ்வறைக்குள் நுழையக்கூடாது என்று பூர்ணலிங்க முதலியார் என்னைத் தடுத்ததன் காரணம் எனக்குக் கொஞ்சங்கூட விளங்கவேயில்லை............

நான் அவ்வறைக்குள் நின்று கொண்டிருக்கும் பொழுது அங்கிருந்த கடிகாரம் ஒருமணி யடித்தது. ஜாக்கிரதையாகவும் மிக அமரிக்கையாகவும் நான் என் மனைவியின் அருகில் குனிந்து உற்றுக்கேட்டான். நிரம்பவும் மெதுவாக அவள் மூச்சுவிட்டுக் கொண்டிருந்தாள். அவளுடைய கையைத் தொட்டுப் பார்த்தேன். 'ஜில்' என்று குளிர்ச்சியாக விருந்தது,

அவளுக்குத் தொந்தரவு கொடுக்கக் கூடாதென் றெண்ணினவனாய் ஒரு நிமிஷம் தயங்கி நின்றுகொண்டிருந்தேன். ஏனென்றால் நான் அவளுடைய முகத்தைப் பார்க்கக்கூடாத விதமாய் அவள் படுத்திருந்தாள். ஆனால் அவளுடைய கட்டிலையே யிப்புறம் மெதுவாக யிழுத்துவிட்டு அப்புறம் சுவற்றிற்கும் கட்டிலுக்கும் மத்தியில் நுழைந்து கொள்ளலா மென்ற யோசனை எனக்குத் தோன்றியது. எனது யோசனையின்படியே நான் செய்தேன். அக்கட்டில் மிகக் கனமா யிருந்தபடியால் அதை யிழுப்பதற்கு என்னுடைய முழுபலமும் வேண்டி யிருந்தது.

அந்த சமயத்தில் என்னுடைய வாயிலும் நெஞ்சிலும் ஒருவித வலி யேற்பட்டது என்னுடைய அதரங்கள் க்ஷணத்திற்கு க்ஷணம் பெரிதாக வீங்குகிறாப்போல் எனக்குத் தோன்றியது. என்னுடைய மூளை குழம்பியது; தேகம் முழுவதிலுமே ஒருவித வலி யுண்டாயிற்று.

இந்த தேகவலியைக் கவனிக்காமல் எனது மனைவியின் முகத்தைப் பார்க்கவேண்டுமென் றாவல் கொண்டவனாய் அவள் படுத்திருந்த கட்டிலுக்கும் சுவற்றிற்கும் இடையிலே புகுந்து கொண்டேன். மீனன் மேல் இருந்த வெள்ளை ஜமக்காளத்தை மெதுவாக எடுத்தேன். அதை யெடுத்தேனோ இல்லையோ அப்படியே பிரமித்து நின்று விட்டேன்.

ஏன்? இப்பூலோகத்திலேயே அப்பேர்ப்பட்ட அழகுள்ள மங்கையை நான் பார்த்ததே கிடையாது. ஆகா! அவளுடைய முக ரூபலாவண்யமும் சாந்த அமைப்பும் காந்த வசீகரமும் விவரிக்க முடியாததாக விருந்தன. மெல்லிய கொடிபோன்ற ஒல்லியும் சிங்காரமான தேகமும், மனோகர வதனமும் அன்பே வடிவமும் என்னை மயக்கி விட்டன. கொவ்வைப்பழம் போன்ற அதரங்களும் முத்துப் போன்ற முப்பத்திரண்டு பற்களும் அவளது அழகுக்கு பொருத்தம் கூறின. பூர்ண சந்திரனையொத்த முகமும், வெண்ணிறக்கழுத்தும், கொழுத்த மார்பும் குறுகிய வயிறும் சிருஷ்டி கர்த்தாவின் சாமர்த்தியத்தைக் குறிததன. இன்னும் அவள் பூலோகத்து ரம்பையோ, ஊர்வசி திலோத்தமையோ அல்லது என்னை மணஞ் செய்துகொண்ட மனைவிதானோ வென்று சந்தேகித்து விட்டேன். அந்த மின்னாளின் கண்கள் என்னையே மிக அன்புடன் பார்த்தன. அவள் என்னைப் பார்த்து புன்னகை புரிந்தாற்போல் எனக்குத் தோன்றியது.

அழகே அவதாரமாய்த் தோன்றிய அம்மின்னாளைப் பார்த்து நான் "உனக்கு என்ன உடம்பு? என்ன விதமான அசௌகர்யம் என்று எனக்குச் சொல்ல லாகாதா? நான் டாக்டர்; என்னாலான உதவியைச் செய்யத் தயாரா யிருக்கிறேன்" என்றேன்.

அவள் யாதொரு பதிலுங் கூறவில்லை. அவளுடைய கண்கள் என்னையே உற்றுநோக்கின. அந்த புன் சிரிப்பு அவளுடைய முகத்தில் அப்படியே மாறாம லிருந்தது. அவளுடைய தேகம் கொஞ்சங்கூட அசையாம லிருந்தது. அடுத்த க்ஷணம் என் மனதில் ஒரு சந்தேகம் தோன்றியது. உடனே குனிந்து ஸ்வாசத்தைக் கவனித்தேன். பிறகு அவளுடைய கன்னத்தில் கையை வைத்துப் பார்த்தேன். ஆ! அக்கொடிய உண்மையைத் தெரிந்து கொண் டேன்!

என் மனைவி இறந்துபோய் விட்டாள்! அவள் தகப்பன் எண்ணிய படியே அவள் பொழுது விடியுமுன் மரண மடைந்தனள்.

நான் ஸ்தம்பித்து நின்று விட்டேன். அவளுடைய வசிகரமான வதனத் தைப்போல் நான் வேறெங்கும் பார்த்ததே கிடையாது. அவளுயிருடனிருக் கும்போது நான் அவளைப் பார்க்க நேரிடும் பட்சத்தில் அவளே தெய்வம் என மயங்கி அவள்பால் எனது காதல் அன்பைப் பாலித்து அவளைவிட்டு ஒரு நிமிஷமாவது பிரிந்திருக்கவும் மனமில்லாம லிருந்திருப்பேன். நேயர்களே! நான் இப்பொழுது சொல்லப் போவதாவது உங்களுக்கு அதிசயத்தையே விளைவிக்கும்! என்றாலும் உண்மையைச் சொல்லுமிடத்து, அவள் தற்சமயம் பிணமாய்க் கிடந்த போதிலும் அவள் மேல் காதல் கொண்டவனாக மயங்கி ஸ்தம்பம்போல் அசைவற்று நின்றேன்.

அவள் எதனாலிறந்தா ளென் றெனக்குத் தெரியவில்லை. அவள் எந்த வியாதியாலும் பீடிக்கப்படவில்லை யென்று நான் முன்னமேயே அறிந்து கொண்டிருக்கிறேன்.

நான் சபாபதி முதலியாருடன் கீழே யிருக்கும்போது இவள் கத்தின தன் காரணமென்ன? நான் இவளுடைய அறைக்குள் நுழையாதபடிக் கதவு பூட்டப்பட்டதன் காரணமென்ன? ஒருவேளை இவளை யாராவது கொலை செய்திருக்கக் கூடுமோ?

நான் என் மனைவியினுடைய உடைகளைக் கழட்டி அவளுடைய கழுத் தைப் பரீட்சித்துப் பார்த்தேன். அவளுடைய கழுத்தில் ஒரு வைர மாலை யிருந்தது. அவள் ஞாபகார்த்தமாக அந்த வைரமாலையை வைத்துக்கொள்ள வேண்டுமென்ற எண்ண முடையவனாய் அதை யெடுத்து என் ஜோபியில் போட்டுக் கொண்டேன்.

அவளுடைய கழுத்தை பரீட்சித்ததிலிருந்து அவள் எதனாலிறந்தா ளென்று என்னால் சொல்ல முடியாமற் போய்விட்டது. இன்னும் எனக்குத் தெரிந்த பரீட்சைகளை யெல்லாம் செய்து பார்த்தேன். அவளுடைய மர ணத்தின் காரணம் எனக்குக் கொஞ்சங்கூடப் புலப்படவில்லை.

அவளுடைய மார்பினில் ஒரு அடையாள மிருக்கக்கண்டேன். அது மிக்க அதிசயமான அடையாளமாகக் காணப்பட்டது. என்னுடைய அனுபவத் திற் கெட்டின வரையில் ஸ்திரீகளுக்கு இவ்வித அடையாளங்களிருப்ப தரிது. ஆகவே என் மனைவியின் மார்பிலிருக்கும் அடையாளம் ஒரு இரகசி யத்தை குறிப்பிடவேண்டுமென்று எண்ணினேன். மேலும் சரியாய்க் கவ னித்ததில் பல வருஷங்களுக்கு முன்னால் இந்தக் குறி யவளது மார்பில் போடப்பட்டிருக்கிறது என்றறிந்து கொண்டேன்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

ஆங்கீரஸ௵ ஆடி௴—கலியுகாதி 5034, சாலிவாகனம் 1855,
பசலி 1342, கொல்லமாண்டு 1107, ஹிஜிரி 1351,
இங்கிலீஷ் 1932௵ ஜூலை௴—ஆகஸ்டு௴

| ஆடி | ஜூலை | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | சனி | திர2-28 சது56-40 | மூல31-15 | சித்60 | பவித்ரோபணம, சர்வ நதி ரஜஸ்வலை, அவமாகம், ஆடிப் பண்டிகை |
| 2 | 17 | ஞா | ○51-40 | பூரா27-55 | சி27-55அ | பௌர்ணமீ, வியாச பூஜை, |
| 3 | 18 | திங் | பிர48-10 | உத்25-40 | ம25-40அ | ஆஷாட பகுளம் [கர்நாள் |
| 4 | 19 | செவ் | துதி46-3 | திரு24-45 | சித்60 | ப்ரதம ருக் உபாகர்மம் |
| 5 | 20 | புத | திரி45-13 | அவி25-33 | பி25-33சி | |
| 6 | 21 | வியா | சது47-0 | சத27-58 | ம27-58சி | |
| 7 | 22 | வெ | பஞ்50-3 | பூர32-15 | சித்60 | |
| 8 | 23 | சனி | சஷ்54-35 | உத்37-53 | சி37-53மா | |
| 9 | 24 | ஞா | சப்60 | ரே44-45 | அ44-45சி | |
| 10 | 25 | திங் | சப்0-5 | அஸ 53-45 | சித60 | |
| 11 | 26 | செ | அஷ்6-8 | பர59-30 | சித்60 | |
| 12 | 27 | புதன் | நவ11-58 | கிரு✻60 | அமி60 | |
| 13 | 28 | வியா | தச17-8 | கிரு6-13 | மா60 | |
| 14 | 29 | வெ | ஏகா21-5 | ரோ12—10 | மா12-10சி | |
| 15 | 30 | சனி | து23-48 | மிரு16-23 | சித்60 | |
| 16 | 31 | ஞா | திர24-48 | திரு19-18 | சித்60 | மாசசிவராத்திரி |
| 17 | 1 | திங் | சது24-30 | புன20-50 | அ20-50சி | போதாயன அமாவாசை |
| 18 | 2 | செவ் | ●அ23-5 | பூச21-3 | சித்60 | ஆடி அமாவாசை |
| 19 | 3 | புத | பிர20-38 | ஆயி20-13 | சித்60 | ஸ்ராவண சுத்தம், சந்திர |
| 20 | 4 | வியா | துதி16-30 | மகம்18-28 | அ18-28சி | கரிநாள் [தெரிசனம் |
| 21 | 5 | வெ | திரி12-10 | பூரம்15-58 | சித்60 | ஆடிப்பூரம், மாச சதுர்த்தி |
| 22 | 6 | சனி | சது7-15 | உத்12-53 | மா60 | நாக சதுர்த்தி [விரதம் |
| 23 | 7 | ஞா | பஞ்1-53 சஷ்56-23 | அஸ்9-35 | அமி9-35சி | சஷ்டி, நாக பஞ்சமி, கருட பஞ்சமி, சூரிய சஷ்டி |
| 24 | 8 | திங் | சப்50-43 | சித்5-58 | பிர5-58அ | சுந்தமூர்த்திசுவாமிகள் திரு |
| 25 | 9 | செவ் | அஷ்45-10 | சுவா2-18 விசா58-40 | சி2-18மா | அவமாகம் [நக்ஷத்திரம் [சேலவிட |
| 26 | 10 | புதன் | நவ39-38 | அனு55-10 | சித்60 | விதை விதைக்க, தானியம் |
| 27 | 11 | வியா | தச34-25 | கே51-53 | பி51-53சி | தநி விரதாரம்பம் |
| 28 | 12 | வெள் | ஏகா29-33 | மூல49-15 | அ49-15பி | வாலக்ஷ்மீ விரதம் [கம் |
| 29 | 13 | சனி | து25-23 | பூரா47-5 | சித60 | சனிப பிரதோஷம், அவமா |
| 30 | 14 | ஞா | திர21-50 | உத்45-50 | அமி 0 | கிருஷியாரம்பம் செய்ய |
| 31 | 15 | திங் | ச○19-25 | திரு45-40 | அ45-40சி | பௌர்ணமீ ருக் உபாகர்மம் |

1932௵ ஆகஸ்டு௴

| | | | |
|---|---|---|---|
| | | செவ் | சுக் |
| ராகு | 3-சிம்-புதன் 10-மிது-செவ் | | சூரி புத |
| சனி | | | குரு கே |
| | | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.